முதற் பதிப்பு: ஜூன், 1960.



விலை 50 காசு.

150 ஆண்டுகளுக்குள் பெருமுன்னேற்றம் அடைந்துள்ள நாடு கனடா. 50 ஆண்டுகளுக்கு முன் விவசாய நாடாக இருந்தது. தண்ணீர் ஊற்றாமல் தானே வளர்ந்த மரங்கள், பனி படர்ந்த குன்றுகள், கடலனைய ஏரிகள், அடர்ந்த காடுகள் —இவை மனிதன் கைபட்டு மாயமாய் மாறியுள்ளன. செல்வச் செழிப்பும் தொழில் வளமும் அடைந்துள்ள கனடா மக்களின் இனிய வாழ்க்கையைச் சுவைபடக் கூறுகிறது இந்நூல்.

மாருதி பிரஸ், 83, பீட்டர்ஸ் ரோடு, சென்னை-14.

# 1. கனடா

இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் (1956-61) தமிழ்நாட்டில் நிறைவேறியிருக்கும் மிகப் பெரிய திட்டம் குந்தா மின்சார நிலையம். இதற்கு 35 கோடி ரூபாய் ஆகியிருக்கிறது. இந்த நிலையத்தை நிறுவப் பொறியியல் அறிஞரைத்தந்து 12 கோடி ரூபாய் விலையுள்ள இயந்திரங் களையும் அன்பளித்திருக்கும் நாடு கனடா.

தமிழ் நாட்டிலிருந்து கனடா ஏறத்தாழ 9000 மைல் (சில இடங்கள் 13,000 மைல்) தொலைவில் இருக்கிறது. கப்பலில் சென்றால் இருபது நாட்களிலும் 'ஜெட்' என்னும் ஆகாயவிமானத்தில் பறந்தால் பத்து மணி நேரத்திலும் கனடாவுக்குப் போய்ச் சேரலாம்.

கனடா, அமெரிக்கா என்னும் பெருநிலப் பரப்பைச் சேர்ந்தது. அமெரிக்காவில் வட அமெரிக்கா நடு அமெரிக்கா, தென் அமெரிக்கா என்று மூன்று பகுதிகள் உள்ளன. வட அமெரிக்காவில் ஐக்கிய அமெரிக்க நாடுகள், (இப்போது இதுவே அமெரிக்கா என்று பொதுவாகக் கூறப்படுகிறது) கனடா ஆகிய இரண்டுமே முக்கியமான அரசுகளாக இருந்து வருகின்றன.

கனடா, உலகின் செல்வம் நிறைந்த நாடுகளுள் ஒன்றாகவும் அரசியல் துறையில் முக்கியத்துவம் உடைய நாடாகவும் இருக்கிறது. கொழும்புத் திட்ட நாடுகளுள் ஒன்றாக இருந்து இந்தியாவுக்கு உதவி புரியும் நாடு கனடா. காமன்வெல்த் என்ற பொது அமைப்புக்குள் இருந்து நம் நாட்டைப் போலவே, பிரிட்டனுடன் கனடாவும் நெருங்கிய உறவு கொண்டிருக்கிறது. சுருங்கச் சொன்னால் 'பங்காளி' உறவு கனடாவுக்கும் இந்தியாவுக்கும் உண்டு.

கனடாவின் பரப்பு 38,51,113 சதுரமைல்; அதாவது இந்தியாவைப் போல் மூன்று மடங்கு. உலகிலேயே பரப்பில் பெரிய நாடு ரஷ்யா; அடுத்தது கனடா.

இந்தியாவின் பரப்பில் அந்தமான் நிக்கோபார் முதலிய தீவுகள் சேர்ந்திருப்பது போல, கனடாவில் நியூபவுந்துலந்து, லாப்ரடார் போன்ற பகுதிகளும் சேர்ந்தவையே. வடக்கே இருந்து தெற்கே 1500 மைல் (2415 கிலோமீட்டர்) அகலமும், கிழக்கேயிருந்து மேற்கே 3,000 மைல் (5,000 கிலோமீட்டர்) நீளமும் உடையது கனடா.

நம் நாட்டில் பகலாக இருக்கும் போது கனடாவின் பெரும் பகுதியில் இரவாக இருக்கிறது. நம் நாட்டுக்கும் கனடாநாட்டுக்கும் பல மணி நேரம் வேறுபாடு உண்டு. சென்னையில் செவ்வாய்க்கிழமை காலை ஆறு மணியாக இருக்கும்போது, கனடாவின் கீழ்க் கோடியிலுள்ள காண்டரில் திங்கட்கிழமை இரவு ஒன்பது மணியாகவும், கனடாத் தலைநகரான ஆட்டவாவில் மாலை ஏழரை மணியாகவும், வாங்கூவரில் திங்கட்கிழமை பிற்பகல் மூன்றரை மணியாகவும் இன்னுஞ் சில கனேடிய நகரங்களில் பகல் மூன்று மணியாகவும் இருக்கும்.

கனடா இந்தியாவைப் போல்மூன்று மடங்கு நிலப் பரப்பு உடையதாயிருந்தும், இந்தியாவில் வாழும் மக்களில் இருபதில் ஒரு பங்குகூட அங்கே வாழவில்லை. 1960-ஆம் ஆண்டுக் கணக்குபடி அவர்களுடைய மக்கள் தொகை ஒரு கோடி எண்பது லட்சம்தான். இயற்கைச் செழிப் பாலும் அமைப்புச் சூழ் நிலையாலும் 'மக்களின் முயற்சி யாலும் பொருளாதாரத் துறையில் கனடா மேம்பாடு அடைந்திருக்கிறது. இத்தகைய நாட்டைப் பற்றி அறிந்து கொள்ளுவது தமிழ் மக்களுக்குப் பயன் தரும்.

## 2. அமைப்பு

அமைப்பு முறையால் அதிர்ஷ்ட முள்ள நாடு கனடா. வட அமெரிக்காவில் ஐக்கிய அமெரிக்க நாடுகளுக்கு வடக்கே உள்ள பகுதி அனைத்தும் (அலாஸ்கா* நீங்கலாக) கனடாவைச் சேர்ந்தது. இதனால் (அட்லாண்டிக், பசிபிக், ஆர்க்டிக் ஆகிய பெருங்கடல்கள் கனடாவின் இயற்கை எல்லைகளாக உள்ளன) கனடாவுக்குச் செயற்கை எல்லை தெற்கே ஐக்கிய அமெரிக்க நாடுகளோடு மட்டுமே உண்டு. இந்த எல்லையின் நீளம் 3987 மைல்; அதாவது இமயத்திலிருந்து குமரிவரை உள்ள தொலைவைப்போல இரண்டு பங்கு. இவ்வளவு நீண்ட எல்லை இருந்த போதிலும் எல்லைச் சச்சரவு செய்யாத, தொல்லை கொடுக் காத அமெரிக்கா அண்டை நாடாக அமைந்தது கனடாவின் பேறு.

கனடா எவ்வளவு பெரிய நாடு என்பதைச் சற்று விளக்கமாகத் தெரிந்து கொள்ளுவது நன்று. லண்டனி

* அலாஸ்கா இப்போது ஐக்கிய அமெரிக்காவின் உறுப்பு இராச்சியங் களுள் ஒன்றாக இருந்து வருகிறது.

விருந்து கப்பலில் புறப்பட்டுப் போய் (அட்லாண்டிக் கரையினின்று 1000 மைல் தொலைவிலுள்ள) மான்ட்ரீலில் போய் இறங்குகிறோம் என்று வைத்துக் கொள்ளுங்கள்.

ஞாயிற்றுகிழமை இரவு 8 மணிக்கு மாண்ட்ரீல் விருந்து ரயிலில் புறப்பட்டால், அன்று பல ஏரிகளைத் தாண்டிச் சென்று மறுநாள் காலையில் எழுந்திருக்கும் போது ஒண்டாரியோ மாநிலத்தின் வடபகுதியிலுள்ள அடர்ந்த காடுகளினூடே ரயில் சென்று கொண்டிருக்கும். செவ்வாய்க்கிழமை காலையில் சிற்றுண்டி உண்ணும் நேரத்தில் வின்னிபெக் நகரை ரயில் அடையும். கால் நடைப் பெருக்கமும் கோதுமை விளைவும் நிறைந்த இப் பகுதிகளை அன்று முழுவதும் காணலாம். புதன்கிழமை யன்று பகல் உணவு உண்ணும் நேரத்தில், இயற்கை அமைப்பில் மாறுதல் தெரியும். ரயில் மலைமீது ஏறிக் கொண்டு போகும். அன்றிரவு ஒரு மலைப் பகுதியிலிருந்து கீழே இறங்கி, பிரிட்டிஷ் கொலம்பியாவின் பள்ளத்தாக்கு களுக்குள் செல்லும். வியாழக்கிழமை காலைச் சிற்றுண்டி நேரத்தில் வாங்கூவர் கடற்கரையை அடையலாம். இவ் வாறு கனடாவின் மறு கரைக்குப் போய்ச் சேர நான்கு நாட்கள் ஆகும். பல்வேறு காட்சிகள் தெரியும்.

கிழக்கேயிருந்து மேற்கே போவது இப்படி என்றால், வடக்கே இருந்து தெற்கே போவதும் இது போன்றே பெரிய பயணம் தான். கனடாவின் வடகோடியில் பனி பெய்த வண்ணமாக இருக்கும்; வேனில் காலத்தில் அங்கு நள்ளிரவில் சூரியன் தெரியும்; அப்பகுதியில் எஸ்கிமோக் களும் பாதிரிமார்களுமே வாழ்கின்றனர். கனடாவின் தென்கோடியில் ஏரிகள் நிறைந்துள்ளன. இவற்றிற் கிடையே உள்ள நிலப்பரப்பின் வளத்தில் பல ஏற்றத் தாழ்வுகள் உள்ளன.

ஆறுகளும் நயகரா அருவியும் ஆங்காங்கு அமைந்து கனடாவுக்கு வளமும் வாழ்வும் தருகின்றன. மலைவளம் சிறிதளவு உண்டு; மலைகள் யாவும் சாதாரணமாக நமது குன்னூர் உயரம்தான் (5000 அடி) உள்ளன. கனடாவின் மிக உயரமான மலை மவுண்ட் லகான் என்பது. அதன் உயரம் 19,850 அடி; இமயமலையை விட இது பத்தாயிரம் அடி குறைவு; தமிழ்நாட்டின் மிக உயர்ந்த மலையான டாப் ஸ்லிப்சைவிட 11,000 அடி கூடுதலான உயரம்.

கனடாவில் ஆற்றுவளம் அளவுகடந்து உள்ளது. குறிப்பிடத்தக்க பெரிய ஆறுகள் மக்கன்சீ ஆறும் செண்ட் லாரன்சு ஆறும் ஆகும். இவை தவிர நூற்றுக்கணக்கான சிற்றாறுகள் அங்கு ஓடுகின்றன.

கனடா கடற்கரையின் நீளம் 12000 மைல், இந்தியாவின் கடற்கரை நீளம் ஏறத்தாழ 4,000 மைல். கடலையொத்த ஏரிகளும் பிற நீர் நிலைகளும் இருப்பதால், கனடாவின் கரை மேலும் எண்ணாயிரம் மைல் நீளம் உடையதாக இருக்கிறது. இவ்வளவு பெரிய கடற்கரை இருப்பது வெளிநாட்டு மக்கள் குடியேறவும், பிறநாட்டுப் பொருள்களை வரவழைக்கவும், கனடாவின் உற்பத்திகளை ஏற்றுமதி செய்யவும், மீன்பிடித்தல் கப்பல் கட்டுதல் ஆகியதொழில்களைப் பெருக்கவும் கனடாவுக்கு உதவியாக இருக்கிறது.

நல்ல நாட்டுக்கு இலக்கணம் அதன் பரப்பில் மூன்றில் ஒரு பகுதியேனும் காடாக இருக்கவேண்டும் என்பது. தமிழ் நாட்டில் இப்போது ஆறில் ஒரு பகுதிதான் காடாக இருந்து வருகிறது. கனடாவின் நிலப்பகுதியில் 100–க்கு 38 பங்கு அடர்ந்த காடாக இருப்பதால், காட்டு வளம் பெருகிப் பல பொருள்கள் அங்கு உற்பத்தியாகின்றன. பத்திரிகைக் காகித உற்பத்தி, சவுக்குமரம் வெட்டுதல்,

மரக்கூழ் செய்தல், மரங்களைப் பயன்படுத்தும் பொருள்கள் செய்தல் ஆகிய தொழில்கள் கனடாவில் காட்டுவளத்தால் அமைந்தவையே. இப்பொருள்கள் அமெரிக்காவுக்கே ஏராளமாக விற்பனை ஆகின்றன. அமெரிக்காவில் வெளி வரும் நாள் இதழ்களும் வார இதழ்களும் தங்களுக்குப் பத்திரிகைக் காகிதம் தங்கு தடையின்றிக் கிடைக்க, கனடாவில் காடுகளை வாங்கியுள்ளன.

கனடாவின் காடுகளில் பலவகையான உயிரினங்கள் வாழுகின்றன. ஆடு, மான், நரி, கரடி, சில்வர் பாக்ஸ் என்னும் பல்வேறு உயிரினங்களும் உள்ளன. உணவுக்காக இவற்றை வேட்டையாடப் பழங்குடி மக்கள் முதலில் காடுகளில் புகுந்தனர்; பின்னர், அங்குக் குடியேறிய வெள்ளையர் பொழுது போக்குக்காக அவற்றைச் சுட்டுத் தள்ளினர். ஆரியக் கூத்தாடினாலும் காரியத்திலே கருத்தாக இருக்க வேண்டுமென்ற நினைவு வரவே, அவர்கள் இந்த உயிரினங்களின் உரோமங்களைக் கம்பளியாக்கி, கம்பளியைக் காசாக்கி விட்டனர். 17-ஆம் நூற்றுண்டில் கனடாவில் வளர்ந்த பெரிய தொழில் இதுவே.

மேப்பிள் என்ற ஒருவகை மரம் ஒண்டாரியோவில் இருக்கிறது. ரப்பர் மரத்தை வெட்டுவது போல, இதில் பட்டையைக் கீறிப் பால்வெட்டலாம். அந்தச் சாறு சர்பத் செய்யவும் சர்க்கரை செய்யவும் பயன் படுகிறது. இந்த முறைப்படி ஆண்டுதோறும் 1,500 டன் சர்க்கரை செய்கிருர்களாம்.

49 டிகிரி வட அட்சரேகையில் தொடங்கி, பனி பெய்யும் வட துருவம் வரை பரவி முப்பெருங்கடல்களால் சூழப்பெற்றது கனடா. எனவே அங்கு, நாடு முழுவதும் ஒரே வகையான தட்ப வெப்ப நிலை இல்லை. அவ்வாறு இருப்பது இயற்கை நியதிக்கு முற்றிலும் முரணானது.

ஹட்சன் விரிகுடாவுக்குத் தெற்கேயுள்ள பகுதிகளில் வெப்பம் 60 டிகிரி (பாரன்ஹீட்)க்கு மேல் செல்லுவதில்லையாம். (திருச்சியில் 105) ஆல்பர்டாவிலும் மனிடோபாவிலும் வேனிற்காலத்தின் அளவு குறைவு; குளிரான மாதங்களே மிகுதி. மேற்குக்கரைப் பகுதிகளிலும் வடகோடியிலும் உள்ள மாநிலங்களிலும் பிற இடங்களை விடக் குளிர் கூடுதலாக இருக்கும். சில பகுதிகளில் புயலோடு கூடிய மழை பெய்வதுண்டு. நமது கண்ணோட்டத்தில் பார்க்கும்போது, கனடா முழுவதுமே குளிர் நிறைந்த நாடுதான்! கனடா மக்கள் தங்கள் தட்பவெப்ப நிலைபற்றிப் பெருமைப் படுகின்றனர். அது ஆடவர்க்கு வலுவையும் பெண்டிர்க்கு அழகையும் கோதுமைக்குக் கெட்டித்தன்மையையும் ஊட்டவல்லது என்பர்.

## 3. உலோகவளம்

கனடா, உலோக வளம் நிரம்பிய நாடு. நிக்கல், பிளாட்டினம், ரேடியம், பல்லேடியம், ஆஸ்பெஸ்டாஸ் ஆகியவற்றின் உற்பத்தியில் கனடா, உலகிலேயே முதல் இடம் வகிக்கிறது.

தங்கம் உற்பத்தி செய்வதில் உலகிலேயே முதல் இடத்தைத் தென் ஆப்பிரிக்காவும், இரண்டாவது இடத்தைக் கனடாவும் பெற்றுள்ளன. பழுப்பு நிலக்கரிச் செல்வமும் கனடாவில் மிகுதி. இதை உற்பத்தி செய்வதில் கனடா இரண்டாவது நாடாக மிளிர்கிறது. நெய்வேலிப் பகுதியில் இருப்பதாக மதிப்பிடப்பட்டுள்ள 200 கோடி டன்னைப்போல 150 மடங்கு பழுப்பு நிலக்கரி கனடாவில் இருக்கிறது.

திரைப் படங்கள் எடுப்பதற்கு இன்றியமையாது வேண்டப்படும் வெள்ளி* உற்பத்தியில் கனடா மூன்றாவது நாடாக உள்ளது. செப்பு உற்பத்தியில் கனடா நான்காவது நாடு.

நிலக்கரி, டெல்லூரியம், ஜிங்கு ஆகிய உலோகங்களும் கணக்கின்றிக் கிடைக்கின்றன. ஆல்பர்டாப் பகுதியில் தோண்டிய இடமெல்லாம் பெட்ரோல் கிடைக்கிறது. அங்கிங்கெனாதபடி எங்கும் எண்ணெய்க் கேணிகள் இருக்கின்றன. சுருங்கக் கூறினால், உலகின் கனிச்செல்வத்தில் நூறில் பதினைந்து பங்கு, கனடாவில் இருக்கிறது,

# 4. வரலாறு

கனடாவின் வரலாறு பதினேழாம் நூற்றாண்டில்தான் தொடங்குகிறது. எனவே, 350 ஆண்டுகளாக அங்கு நிகழ்ந்தவைபற்றியே அறுதியிட்டுச் சொல்லத்தக்க ஆதாரமான செய்திகள் உள்ளன.

அதற்கு முற்பட்ட காலத்தில் சிவப்பு இந்தியா என்று வெள்ளைக்காரர்கள் குறிப்பிடும் மக்கள் சில ஆயிரம் ஆண்டுகளாகக் கனடாவில் வாழ்ந்து வருகின்றனர். அவர்கள் எங்கிருந்து வந்தனர் என்பது உறுதியாகத் தெரியவில்லை.

இனி, ஐரோப்பியர் கனடாவைக் கண்ட வரலாற்றைக் கூறுவோம். இந்தியா செல்வத்தில் திளைத்திருப்பதை ஐரோப்பியர் பல நூற்றாண்டுகளாகக் கேள்விப்பட்ட வண்ணமாக இருந்தனர். திரு நிறைந்த இந்திய நாட்டைக் காணவேண்டுமென அவர்கள் கனவு கண்டனர்.

---

* இதனாலேயே 'வெள்ளித்திரை' என்ற சொற்றொடர் ஏற்பட்டது.

கொலம்பஸ் என்ற ஸ்பானியர் 1492-இல் அமெரிக்காவில் போய் இறங்கி, 'இதுதான் இந்தியா' என்று கூறினர். அவர் போய்ச் சேர்ந்தது இந்திய நாடன்று; அது ஒரு புத்துலகம் என்ற உணர்வு ஏற்பட ஈராண்டுகள் ஆயிற்று. மீண்டும் முயற்சிகள் செய்யப் பட்டன, இந்திய நாட்டைக்காண. 1497-இல் இந்தியா வுக்குப் புதுவழி கண்டு பிடிக்கப் புறப்பட்டார் ஜான் கபோட் என்ற இத்தாலியர். அவர் போய் இறங்கியது கனடா மண்ணில். அவரே கனடா நாட்டில் கால் வைத்த முதல் ஐரோப்பியர் ஆவார். கனடாவை முதலில் கண்டவர் இத்தாலியர் ஆயினும், அந்நாட்டைக் கைப் பற்றி அங்குத் தம் கொடியைப் பறக்கவிடும் வாய்ப்பும் பேறும் ஆங்கிலேயர்க்கே கிடைத்தது.

16-ஆம் நூற்றுண்டு ஐரோப்பாவில் மந்தமான காலமாக இருந்தது. அந்த நூற்றுண்டின் இறுதியில் ஓர் எழுச்சி ஏற்பட்டது. அடுத்த நூற்றுண்டின் தொடக்கத்தில் அந்த எழுச்சி, அலைகடலுக்கப்பால் குடியேறும் நிகழ்ச்சியாகவும் குடியேறப் புதுநாடுகளைப் பிடிப்பதில் போட்டி உண்டாக்கும் செயலாகவும் உருவாயிற்று.

1608-இல் — ஆங்கிலேயர் சென்னையில் இறங்கு வதற்கு 31 ஆண்டு முன்னதாக—ஆங்கிலேயரும் பிரெஞ்சுக் காரரும் கனடாவிலுள்ள குயூபக்கில் குடியேறி, காடு களிலுள்ள உயிரினங்களை வேட்டையாடி, கம்பளித் தொழிலில் ஈடுபட்டனர். இத் தொழிலில் இவர்களிடையே ஏற்பட்ட போட்டிதான், கனடாவின் வரலாற்றில் குறிப்பிடத்தக்க முதல் நிகழ்ச்சி.

அந்த நூற்றுண்டில் தென்னிந்தியாவிலும் இவ்வாறே ஆங்கிலேயரும் பிரெஞ்சுக்காரரும் பொருளாசையாலும்

மண்ணுசையாலும் திருச்சியிலும் வந்தவாசியிலும் ஆர்க் காட்டிலும் அரக்கோணத்திலும் காஞ்சியிலும் கூட லூரிலும் பரங்கிப்பேட்டையிலும் போரிட்டதை யொத்த கதைதான் இது. கனடாவில் ஆர்க்காட்டு நவாபு போன்ற ஐந்தாம் படைகளில்லை; போக்குவரத்து வசதி ஏற் படாததால், பல இடங்களில் போர் நிகழ்தற்குச் சூழ்நிலை இடந்தரவில்லை. இவை மட்டுமே வேறுபாடு.

1763–இல் பிரெஞ்சுப் போர் வீரர் கனடாவிலிருந்து புறங்கண்டு ஓடினர். அதன் பின்னரே வணிகப் போட்டி முடிவடைந்தது. அந்த ஆண்டிலேயே பிரெஞ்சுக்காரர் தங்களுக்கு உடைமையாக இருந்த பகுதிகளைப் பிரிட்டி ஷார்க்கு விட்டுக்கொடுத்தனர்.

மழை விட்டாலும் துவ்வானம் விடவில்லை' என்பர். அவ்வாறே பிரெஞ்சுப் போர்ப் படைகள் புறங் கண்டாலும், கனடாவில் குடியேறிய பிரெஞ்சுக் காரர்கள் பிரிட்டிஷாருக்குத் தொல்லை தந்துகொண்டே இருந்தனர். இதனால், பிரெஞ்சுக்காரர் மிகுதியாக உள்ள கியூபக்கில் பிரான்சைப் பின்பற்றும் ஆட்சி முறைகளை ஏற்றுக் கொள்ளப் பிரிட்டன் இசைந்தது.

18–ஆம் நூற்றுண்டில் கனடாவில் முப்பெரும் மாறுதல்கள் ஏற்பட்டன. பல லட்சம் மக்கள் ஐரோப்பிய நாடுகளிலிருந்து கனடாவுக்குக் கப்பல் கப்பலாக வந்து குடியேறினர். அமெரிக்காவில் பிரிட்டனுக்கு விரோதமாக நடைபெற்ற சுதந்தரப் போரின் விளைவாக, அரசியல் உணர்ச்சி கனடாவிலும் பெருகிற்று. பிரிட்டனில் ஏற்பட்ட பொருளாதாரப் புரட்சியின் எதிரொலியாக, கனடா வெங்கும் காடு வெட்டி நாடாக்கிப் பொருள் நிலையை உயர்த்தித் தொழில் வளம் பெருக்கும் முயற்சிக்கு அடிகோலப் பெற்றது.

அமெரிக்கா—பிரிட்டன் உறவு சீர்கெட்டதால், கனடாவைப் பிரிட்டிஷார் ஒரு தளமாகப் பயன்படுத்தினர். இதை அமெரிக்கர் சிறிதும் விரும்பவில்லை. இதன் விளைவாக, கனடாவுக்குச் செயலளவில் சுதந்தரம் கொடுத்து விட வேண்டுமென்று 1846—இல் டர்ஹாம்பிரபு அறிவுரை கூறினர். வளமான நிலம் அனைத்தும் கத்தோலிக்கப் பாதிரிமார் கையில் அமைந்துவிட்ட தென்ற எண்ணம் பரவிற்று; இதனால், அமெரிக்காவிலிருந்து பிராடஸ்டண்டுகள் ஏராளமாகக் கனடாவுக்கு வந்து கிடைத்த இடங்களை யெல்லாம் 'பட்டா' போட்டுக் கொண்டனர்!

1867—இல் அமெரிக்கர், அலாஸ்காவை விலைக்கு வாங்கினர். செல்வமும் செல்வாக்கும் பெருத்த அமெரிக்காவை நினைத்தாலும் கனடாவுக்கும் பிரிட்டனுக்கும் அச்சம் ஏற்பட்டது. நெல்லிக்காய்கள் போலச் சிதறுண்டு கிடந்த ஒண்டாரியோ, கியூபக், நியூ பிரன்சுவிக், நோவாஸ்காஷியா ஆகிய பகுதிகளைப் 'பிரிட்டிஷ் வட அமெரிக்கா' என்ற பெயரில் ஒரு மூட்டையாகப் பிரிட்டிஷ் ராஜதந்திரிகள் கட்டினர்.

1870—க்குப் பிறகு, தொழில் வளர்ச்சி விரைவாக ஏற்பட்டது. 1914—இல் உலகப்போர் தொடங்கியபோது கனடா, நேசநாடுகளுக்கு ஆளும் ஆகாரமும் அடிப்படைப் போர்க் கருவிகளும் அனுப்பியது. போர்முடிவடைந்த பிறகு, தொழிலாளர் வேலை நிறுத்தங்களும், கொள்கை அடிப்படையில் கருத்துவேற்றுமைகளும் கனடாவில் தோன்றின. கனடாவின் விவகாரங்களில் பிரிட்டன் தலையிடுவதாகக் கருத்து நிலவியது. இங்கிலையில் பிரிட்டிஷார் கவர்னர் ஜெனரலை நியமிப்பது தவிர, வேறு உரிமை ஒன்றுகூடத் தங்களுக்குக் கனடாவில் இல்லை என்பதைத் தெளிவுபடுத்தினர். 1926—இல் கனடா, எல்லா நாடுகளுடனும் நேரடியாக அரசியல் உறவுகொண்டு தூதுவர்களை அனுப்பிற்று.

# 5. மாநிலங்கள்

கனடா இந்தியாவைப் போலவும் அமெரிக்காவைப் போலவும் பரந்த நாடாக இருக்கிறது. ஒரே ஆட்சியை வைத்து இவ்வளவு பெரிய நாடுகளை ஆளுவது என்பது இயலாது. ஆகையால், இந்த நாடுகளில் நாடு முழுமைக்கும் ஆட்சி செலுத்தும் பொது அரசியலாராக மத்திய அரசியலாரும், அந்தந்தப் பகுதியின் ஆட்சிப் பொறுப்புக்கு உரிய பிரதேச அரசியலார்களும் உள்ளன.

இந்தியாவிலும் அமெரிக்காவிலும் உள்ள பிரதேச அரசியலார்களுக்கு இராச்சியங்கள் என்றும் கனடாவில் உள்ள பிரதேச அரசியலார்க்கு மாநிலங்கள் என்றும் பெயர்.

இராச்சியம் என்பது தனி நாடாக இயங்க வல்லது ; எனினும் தற்காப்பு, வெளிநாட்டுக் கொள்கை, நாணயம் ஆகியவை பொதுவாக இருப்பது நலம் என்று கருதுவதால் பல இராச்சியங்கள் ஒன்றுகூடித் தங்கள் அதிகாரங்களை விட்டுக் கொடுத்து ஓர் ஐக்கிய அரசை—பொது அரசியலாரை — தாமே வலிய ஏற்படுத்திக் கொள்வதாக இது பொருள்படும்.

மாநிலம் என்பது தனி நாடு அல்லது தனிப் பண்பாடு உடைய பகுதி ஆகாது ; பொது அரசியலார் தங்களுடைய அதிகாரங்களைக் குறிப்பிட்ட சில செயல்களில் உடனடியாகப் பயன்படுத்துவதற்காக ஏற்படுத்தும் ஓர் அமைப்பு. நகரசபைகள், மாவட்டக் கழகங்கள் போன்றதே இது ; ஆனால், அவற்றைவிட மாநிலங்களுக்கு மதிப்பு உண்டு. சட்டசபையும் அமைச்சரவையும் கவர்னரும் உண்டு.

கனடாவில் 12 பகுதிகள் உள்ளன ; அவை யாவன :

## 1. எட்வர்டு இளவரசர் தீவு

இதன் பரப்பு 2184 சதுர மைல்; அதாவது முன்னுள் புதுக்கோட்டைத் தனியரசைப்போல இரண்டு பங்கு, அவ்வளவுதான். ஆனல், புதுக்கோட்டை வறண்ட பகுதி; கடற்கரையில்லாதது. கனடாவிலுள்ள இம்மா நிலம் செழிப்பானஒரு தீவு. தலைநகர் ஷார்லட்.

## 2. லாப்ரடாரும்நியூ பவுந்துலந்தும்

லாப்ரடார் கனடாவின் வடகிழக்கிலுள்ள ஒரு சிறு பகுதி. நியூபவுந்துலந்து கனடாவுக்குக் கிழக்கே அட்லாண்டிக் பெருங்கடலிலுள்ள ஒரு தீவு. இவ்விரண்டும் சேர்ந்து ஒரு மாநிலமாக இணைக்கப்பட்டுள. இம்மாநிலத்தின் பரப்பு ஒன்றரை லட்சம் சதுர மைல்; அதாவது தமிழ் நாட்டைப் போல மூன்று பங்கு. மக்கள் தொகை நான்கு லட்சம்தான்; அதாவது தமிழ் நாட்டில் 75-இல் ஒரு பங்கு. புதிதாகக் கண்டு பிடிக்கப் பட்ட நாடு என்ற பொருளில் 'நியூ பவுண்ட் லாண்டு' என்ற பெயர் ஆங்கிலத்தில் கொடுக்கப்பட்டிருக்கிறது. இது 1949-இல்தான் கனடாவுடன் இணைக்கப்பட்டது; 1713-முதல் 1948-வரை இது இங்கிலாந்தின் நேரடியான ஆட்சியில் இருந்துவந்தது. தலைநகர் செயின்ட்ஜான்.

இரும்புத்தாதும் பிற உலோகங்களும் இங்கே கிடைப்பதால், சுரங்க வேலை செய்து பிழைப்பவர் பலர் வாழ்கின்றனர். மீன் பிடித்தல், காடுகளைப் பேணுதல், பெரிய தொழில்களாக உள்ளன.

## 3. நோவா ஸ்காசியா

இதன் பரப்பு 21,068 சதுர மைல்; கேரளத்தைப் போல ஒன்றரைப் பங்கு. மக்கள் தொகை ஏழு லட்சம்; கேரளத்தில் ஒன்றரைக் கோடி.

கேப் பிரிட்டன் என்ற தீவும் இந்த மாநிலத்தைச் சேர்ந்தது. கடல்வளம், மலைவளம், பள்ளத்தாக்குகள், ஆழமான உட்குடாக்கள் ஆகியவை உடையது. பல துறைமுகங்கள் இருக்கின்றன. அதையொட்டிக் கப்பல் கட்டும் தொழிலும் எஃகுத் தொழிலும் பெருகியுள்ளன. மழை மிகுதி; ஆப்பிள் பழம் மிகுதி. தங்கம், நிலக்கரி, இரும்புத்தாதுச் சுரங்கங்கள் பல இடங்களில் உள்ளன.

வரலாற்றுப் பெருமை உடையது இந்த மாநிலம்; கனடா டொமினியன் ஏற்படுமுன்னரே உரிமை பெற்று விளங்கிய இரு மாநிலங்களில் இது ஒன்று. கனடாவின் முதற் பல்கலைக் கழகமாகிய 'கிங்ஸ் காலேஜ்' இம் மாநிலத் தலைநகரான ஹலிபாக்சில் 1789-இல் தோன்றிற்று.

## 4. நியூ பிரன்சுவிக்

இதன் பரப்பு 28,000 சதுர மைல். அதாவது மேற்கு வங்காள இராச்சியத்தில் முக்கால் பங்கு என்று சொல்லலாம். இதன் மக்கள் தொகை ஆறுலட்சம்; மதுரைமாநகரின் மக்கள் தொகை அளவினது.

இங்குள்ள மக்களில் 100-க்கு 30 பேர் பிரெஞ்சு மொழியும் ஏனையோர் ஆங்கிலமும் பேசுகின்றனர். கனடா ஒரு நாடாக ஏற்படு முன்னரே, நியூ பிரன்சுவிக் முழு உரிமை பெற்ற மாநிலமாக இயங்கி வந்திருக்கிறது.

ஆற்றுவளமும் காட்டு வளமும் விவசாய வளமும் நிறைந்த மாநிலம் இது. தலைநகர் பிரெடரிக்டன்.

## 5. குயூபக்

கனடாவில் பல தனிச்சிறப்புக்களை உடைய மாநிலம் இது. இதன் பரப்பு ஆறுலட்சம் சதுரமைல்; தமிழ்நாடு,

கேரளம், மைசூர், ஆந்திரம் ஆகிய நான்கு இராச்சியங்களின் மொத்தப் பரப்பைப் போல நான்கு பங்கு. ஆனால் மக்கள் தொகை 40 லட்சம்; சேலம் மாவட்டத்தில் வாழ்பவர் தொகைக்குச் சமமானது. கனடாவின் மிகப் பெரிய மாநிலமும் மிகப் பழமையான மாநிலமும் இதுவே.

ஒரு காலத்தில் குவூபக், பிரெஞ்சுக்காரர்களின் குடியேற்ற நாடாக இருந்தது. இப்போதும் இங்கு பிரெஞ்சு மொழியினர் மிகுதியாக உள்ளனர். இம்மாநிலத்தில், ஆட்சி மொழியாகவும் பிரெஞ்சு, இருந்து வருகிறது. சென்னை நகரில் ரிக்ஷாக்காரர்களுக்குத் தெரிந்த அளவு கூட ஆங்கிலமொழி அறியாதவர்கள் பல லட்சம்பேர் குவூபக்கில் இருக்கின்றனர். ஊர்ப் பெயர்கள், இடங்களின் பெயர்கள் யாவும் பிரெஞ்சு மயமாக இருக்கின்றன. 100 பேரில் 94 பேருக்குத் தெரிந்தது பிரெஞ்சுதான்.

சொத்து, உரிமை, திருமணம், வியாபாரக் கொடுக்கல் வாங்கல் ஆகியவற்றிற்குப் பிரெஞ்சுச் சட்டமும், கொலைக்குற்றம், திருட்டுச் செயல், அடிதடி வழக்குகளுக்கு ஆங்கிலேயரின் சட்டமும் நிலவி வருகின்றன.

உலகத்திலேயே பெரிய காகித ஆலை என்று சொல்லப்படும் 'ஆங்கிலோ கனேடிய பல்ப் அண்டு பேப்பர் கம்பெனி' இந்த மாநிலத்தில் இருக்கிறது. பத்திரிகைக் காகிதம் செய்வது தவிர மரங்களை வெட்டுதல், செப்பு—தங்கம், டெல்லூரியம் போன்ற உலோகப் பொருள்கள் எடுத்தல், இரும்புத்தாது ஆஸ்பெஸ்டாஸ் மைகா வெட்டுதல் ஆகியவையும் இங்கே சிறப்பான தொழில்களாக உள்ளன. கல்நார் உற்பத்தியில் உலக உற்பத்தியில் 5 இல் 4 பங்கு இங்குகிடைக்கிறது. இராசிபுரம் வெண்ணெய் தமிழ் நாடெங்கும் புகழ்பெற்றிருப்பது போல, குவூபக் வெண்ணெய் கனடா எங்கும் பெயர் பெற்றிருக்கிறது. கோதுமை,

பார்லி, சீமை அவல், உருளைக்கிழங்கு, பழவகைகள் பயிராகின்றன.

## 6. ஒண்டாரியோ

இது கியூபக்குக்கு அருகேயுள்ள மாநிலம், பரப்பளவில் கியூபக்குக்கு அடுத்த மாநிலம் இது; இதன் பரப்பு 413,000 சதுரமைல். மக்கள் தொகையிலும் செல்வச் செழிப்பிலும் கனடாவின் முதல் மாநிலம் இதுவே. 1700 தீவுகள் இருப்பதால் இங்குவந்து தங்கி அமெரிக்கச் செல்வர்கள் மகிழ்கின்றனர். நீர் வளமும் நில வளமும் வெப்பமில்லாத் தன்மையால் பருவநலமும் ஒருங்கே வாய்க்கப் பெற்றது. ஆப்பிள், திராட்சை, பீச்சஸ், பேரி, ஸ்டிராபெரீஸ் ஆகிய பழங்கள் பெரிய அளவில் இங்கு பயிரிடப்படுகின்றன. கனடாவில் திராட்சை விளையும் மாநிலம் இது மட்டுமே.

இம்மாநிலத்தில் விளையும் பழங்கள் யாவும் வெளி நாடுகளுக்கும் வெளி மாநிலங்களுக்கும் செல்லுவதால் அவற்றை நன்ருகப் பங்கிடவு செய்து அனுப்புவதும் மணமும் குணமும் கெடாதவாறு அவற்றைத் தகரங்களில் அழகாக அடைப்பதும் ஒரு கலையாகப் பயிற்றுவிக்கப்படுகிறது. அதற்கென விவசாயத்துறையினர் பள்ளிக்கூடங்கள் நடத்துகின்றனர். பழங்களை அடுக்குவது எப்படி? அவற்றை விற்பனை செய்யும் முறை என்ன? அவற்றை அடைத்த பெட்டியில் அடையாளம் போடுவது எங்ஙனம்? இப்படிப் பயனுள்ள செய்திகளை அங்குப் படிப்பிக்கிருர்கள்.

ஒண்டாரியோவில் கோதுமை விளைவும் புகையிலை விளைவும் மிகுதி. மரக்கூழ் உற்பத்திமிகுதி. நாணயம் அச்சிட உதவும் நிக்கல் என்னும் உலோகமுள்ள சுரங்கங்களும், பெட்ரோல் கிணறுகளும் நிரம்பயிருக்கின்றன.

**7. மனிடோபா**

இது ஒண்டாரியோவுக்கு மேற்கே உள்ள மாநிலம். பரப்பு 2½ லட்சம் சதுரமைல். மக்கள் தொகையிலும் இது நடு நிலையிலுள்ள மாநிலம். தலைநகர் வின்னிபெக். சர்ச்சில் ஆறும் நெல்சன் ஆறும் ஓடுகின்ற பகுதி இது. விவசாயமே இங்கு இரு நூற்றாண்டுகளாகப் பெரிய தொழிலாக உள்ளது. 1930க்குப் பிறகு எங்கு ஆலைகள் இம்மாநிலத்தில் எழுந்துள்ளன. எண்ணெய்க் கிணறுகளும் கண்டுபிடிக்கப் கப்பட்டுள்ளன. இறைச்சியைப் பக்குவப் படுத்துவதும், வெண்ணெய்யைப் பங்கிடவு செய்வதும் தொழில் முறையில் நடைபெறுகின்றன.

**8. சஸ்கெசவான்**

தமிழ் நாட்டைப்போல ஐந்து பங்கு பரப்பும் (2½ லட்சம் சதுர மைல்) சென்னை நகரின் மக்கள் தொகையில் பாதியும் (10 லட்சம்) உள்ள மாநிலம்.

சமவெளியாக அமைந்த பகுதி. ஆறுகளும் ஏரிகளும் காடுகளும் இங்கு நிறைய உள்ளன. மக்கன்சி ஆறு, சர்ச்சில் ஆறு, முதலியன முக்கியமானவை. சஸ்கெசவான் என்னும் ஆறும் உண்டு; அதன் பெயராலேயே மாநிலத்திற்குப் பெயர் வைக்கப்பெற்றிருக்கிறது. வின்னிபெக் ஏரி, சர்ச்சில் ஏரி ஆகிய பெரிய ஏரிகளும் ஆல்பர்ட் இளவரசர் பெயரால் ஏற்பட்டுள்ள தேசியப் பூங்காவும் இம் மாநிலத்தில் காணத்தக்கவை. ஆண்டு தோறும் விளையும் கோதுமையின் மதிப்பு 300 கோடி ரூபாய் என்பதிலிருந்து இங்கு வேளாண்மை பெருகியிருப்பதை ஓரளவு உணரலாம். தஞ்சை மாவட்டம் தமிழகத்தின் நெற்களஞ்சியமாக இருப்பதுபோல, இந்த மாநிலமும் ஆல்பர்டாமாநிலமும் உலகின் கோதுமைக் களஞ்சியங்களாக உள்ளன. தலைநகர் ரெஜினா.

தங்கம், பழுப்பு நிலக்கரி, பொட்டாஷ், செம்பு, துத்த நாகம் ஆகிய செல்வங்களும் நிறைந்த மாநிலம் இது.

## 9. ஆல்பர்டா

இது இரண்டரை லட்சம் சதுரமைல் பரப்புள்ளது. குறிஞ்சி நில அமைப்புள்ள மாநிலம். பழுப்பு நிலக்கரி பலகோடி டன்னும், ஏராளமான கல்நாரும் அளவிடற்கரிய அளவு பெட்ரோலும் இங்கு கிடைக்கின்றன. சமையலுக்கும் குளிரைப் போக்கிக் கொள்ளவும் உதவும் 'காஸ்' (Gas) கிடைக்கிறது. மருத்துவத் துறையில் பயன்படும் 'ரேடியம்' ஆர்க்டிக் பகுதியில் அகப்படுகிறது. கோதுமை விளைவு இங்கு மிகுதி.

மண்பாண்டம், பீங்கான் பொருள்கள், புட்டிப்பால், சிமெண்டு உற்பத்தி இங்கு பெருகியுள்ளன. குதிரை வளர்ப்பது இங்கு வருவாயுள்ள தொழிலாக இருந்து வருகிறது. தலைநகர் எட்மன்டன்.

## 10. பிரிட்டிஷ் கொலம்பியா

3,66,000 சதுரமைல் பரப்பும், கடல் வளமும் மலை வளமும் நிறைந்த மாநிலம் இது. வான்கூவர் முதலிய தீவுகளும் இம்மாநிலத்தைச் சேர்ந்தவையே. தலைநகர் விக்டோரியா. ஆசிய நாடுகளிலிருந்து இம்மாநிலத்தில்தான் மக்கள் குடியேற்றம் ஏற்பட்டது. இந்தியர் பலர் வாழும் மாநிலம் இது. சீக்கியர்களின் கோயிலான குர்த்வாரா இருக்கிறது.

கடல் துறைமுகங்களும் தங்கச் சுரங்கங்களும் நிறைந்தது பிரிட்டிஷ் கொலம்பியா. உலகத்திலேயே இங்குதான் 'ஜிங்' (Zinc) என்னும் உலோகம் ஏராளமாகக் கிடைக்கிறது. அலுமினியத் தொழிலும் பெரிய அளவில்

நடைபெறுகிறது. நிலக்கரி, ஆண்டிமனி, பிஸ்மத், டங்ஸ்டன் தாது, பெட்ரோல் ஆகிய இயற்கைச் செல்வங்கள் இங்கே மண்டிக் கிடக்கின்றன. இம் மாநிலத்தில் இவற்றைத் 'தொட்டு'ப்பார்த்த அளவிலேயே செல்வம் பெருகியிருக்கிறதாம். 'தோண்டி'ப் பார்த்தால் சொல்லவா வேண்டும்?

மலைவளமும் நீர்வளமும் மிகுந்த பகுதிகள் இருப்பதால் எங்கு பார்த்தாலும் அணைகள் கட்டப்பட்டுள்ளன. சில இடங்களில் 10 மைல் தொலைவுக்கு மலையைக் குடைந்து, மறுபக்கம் மலையின் அடிவாரத்தில் மின்சார நிலையம் நிறுவியுள்ளனர்.

மீன் பிடிக்கும் தொழிலும் இம் மாநிலம் மற்ற மாநிலங்களை மிஞ்சி விடுகிறதாம். மீன் விற்ற காசு நாறுமா? அதிலும் அங்கு உல்லாசச் சுற்றுலா வருபவர் அமெரிக்க டாலரைத்தரும்போது?

## 11. யுகான்

இது ஒரு சிறு பகுதி; மாநிலம் அன்று. மத்திய அரசியலாரின் நேர் பார்வையில், கண்காணிப்பில் இருந்து வருகிறது. தங்கமும் வெள்ளியும் தட்டின்றிக் கிடைப்பதும் தாங்க முடியாத குளிர் பல மாதங்களுக்கு நிலவுவதும் இதன் தனிச் சிறப்பு. பழங்குடி மக்கள் 12,000 பேர் உள்ளனர். தங்கம் தோண்டப் பட்டபோது வெள்ளையர் வந்து சென்றனர். இதன் பரப்பு இரண்டு லட்சம் சதுரமைல். தலைநகர் வைட் ஹார்ஸ்.

## 12. வடமேற்குப் பகுதிகள்

கனடாவின் பரப்பில் ஐந்தில் இரண்டு பங்கு இதில் அடங்கியிருக்கிறது. பல தீவுக் கூட்டங்கள் சேர்ந்த பகுதி இது. கம்பளித் தொழில் இங்கு முக்கியமானது. எழில்

மிக்க பூந்தோட்டங்களும், நீலகிரி மாவட்டத்து முது மலையில் இருப்பது போன்று வேட்டையாடுமிடங்களும் உள்ளன. பரப்பு 13 லட்சம் சதுரமைல். தலைநகர்கள், ஆட்டவாவும் எட்மன்டனும்.

## 6. காணத்தகு இடங்கள்

காகித ஆலைகள், பழத் தோட்டங்கள், பூத்துக் குலுங்கும் தேசியப் பூங்காக்கள் ஆகியவை கனடாவில் பார்க்கத் தக்கவை. மக்களில் பாதிப்பேர் நகரங்களில் தான் வாழ்கின்றனர். ஆட்டவா, மான்ட்ரீல், வான்கூவர் குயூபக், வின்னிபக் ஆகிய நகரங்களும் நயகரா நீர் வீழ்ச்சியும் கனடாவில் காண்பதற்கு உரியவை.

### ஆட்டவா

கனடாவின் தலைநகர் ஆட்டவா. ஆட்டவா என்னும் ஆற்றின் கரையில் அமைக்கப்பட்ட அழகான நகரம் இது. கவினுறு கட்டிடங்கள், கண்ணைக் கவரும் வண்ண மலர்கள் உள்ள பூங்காக்கள், கலைப் பொருள்கள் மலிந்த காட்சி நிலையங்கள், தெருத்தோறும் தேவாலயங்கள்--இவைதாம் ஆட்டவா. ஒரு நாள் சூரிய வெப்பம் இருக்கும்; தென்றல் காற்றும் வீசும்; மறு நாள் வாடைக் காற்று அடிக்கும்; முதல் நாள் 46°F ஆக இருந்தது அன்று 'சைபர்'க்கும் கீழே போய்விடும். குளிர் காற்றினின்றும் காதுகளைப் பேணக் கம்பளி மூடிகளைப் போட்டுக்கொள்ள வேண்டும். இந்நகரின் மக்கள் தொகை 25 லட்சம்.

ஆட்டவாவின் கட்டிடங்களுள் பொலிவும் தோற் றமும் பொருந்தியது கனேடியப் பாராளு மன்றத்து மாளிகை. இதிலுள்ள ஒரு கோபுரம் 291 அடி உயரமானது. (திருச்சி மலைக்கோட்டையின் உயரம் 273 அடி;

சென்னையிலுள்ள ஆயுள் இன்சூரன்சு கார்ப்பரேசன் கட்டிடத்தின் உயரம் 177 அடி.)

1858-இந்தியாவைப்போலக் கனடாவுக்கும் முக்கிய மான ஆண்டு. இரு நாடுகளுக்கும் அப்போது விக்டோரியா அரசி, 'மஹாராணி'யாக இருந்தார். இந்தியாவில் கலகத்தை அடக்கி அமைதியை நிலைநாட்ட முயன்றார்; கனடாவுக்கு ஒரு தலைநகரை முடிவு செய்தார்.

1932 சூலையில் இந் நகரில் நடைபெற்ற ஆட்டவா மாநாட்டில் இந்தியாவின் பிரதிநிதியாகப் பொருளாதார மேதை ஆர்.கே. சண்முகம்செட்டியார் கலந்துகொண்டார். அவர் இந்தியாவின் நலனை விட்டுக்கொடுத்துவிட்டார் என்றும் ஆட்டவா உடன்பாட்டைக் கிழித்துவிட வேண்டு மென்றும் நாடெங்கும் கிளர்ச்சி நடந்தது; மத்திய சட்ட சபையில் விவாதம் நிகழ்ந்தது; "ஆட்டவா உடன் பாட்டை எதிர்ப்பவர்கள் பொருளாதார நுட்பம் அறியாதவர்கள்; அது மட்டுமல்ல, ஆட்டவா என்ற சொல்லையும் உச்சரிக்கத் தெரியாமல் ஒட்டாவா என்று தவறுகக் கூறுபவர்கள்" என்று அப்போது சண்முகம் செட்டியார் முழங்கினர்; "ஆட்டவா வீரர்" என்று அவரை அரசியல் எதிரிகள் கேலி செய்தனர்.

**மான்ட்ரீல்**

கனடாவின் மிகப் பெரிய நகரம் இதுதான். பல நாட்டு மக்களும் பல இனத்தவரும் வாழும் பாங்கு உடைய நகர். பழங்குடி மக்களைப் பண்படுத்தவும் இயேசுவின் சமயத்தை இயம்பவும் கத்தோலிக்கப் பாதிரிமார் குடியேறி உருவாக்கிய நகரம்; அவர்கள் அமைத்த இரு பல்கலைக் கழகங்கள் இந்நகருக்குப் பெருமை தருகின்றன.

இன்று 3000 தொழிற்சாலைகள் இங்கு உள்ளன. கனடாவிலுள்ள பெரு வணிகரின் தலைமை அலுவலகங்

களும் இங்கேதான் இருக்கின்றன. 12,000 பேர் ஒரே நேரத்தில் உட்கார்ந்து தொழுவதற்கேற்ற கத்தோலிக்கக் கோயில் இந்நகரில் இருக்கிறது.

### டொரண்டோ

ஆங்கிலம் பேசும் மக்கள் மிகுதியாக வாழும் நகரங்களில் இதுவே கனடாவில் பெரிய நகரம். துணி உற்பத்தி, ரயில் போக்கு வரத்து, பொறியியல் தொழில்களால் சிறப்புற்று விளங்கும் இந்நகர், ஒண்டாரியோ மாநிலத்தின் தலைநகராக இருக்கிறது.

### வாங்கூவர்

காப்டன் வாங்கூவர் என்பர் கண்டுபிடித்த ஊர்; இது பசிபிக் கடற்கரையிலுள்ள பெரிய துறைமுகம். அழகான காட்சிகளுடைய தனித்தீவு. கப்பல் போக்குவரத்து இங்கு அதிகம். அதையொட்டிப் பல தொழில்கள் தோன்றிய வண்ணமாக உள்ளன. 1955-க்கும் 1959-க்கும் இடையே (இயந்திரங்கள் செய்தல், செப்பு ஆலை, மரம் அறுத்தல், உலோகங்களைப் பக்குவப்படுத்துவது முதலிய) 35 பெரிய தொழில்கள் ஏற்பட்டுள்ளனவாம்.

1914-இல் பனமா கால்வாய்* திறந்த பிறகு வாங்கூவர் துறைமுகம் நாளொருமேனியும் பொழுதொரு வண்ணமு

---

* இது அட்லாண்டிக், பசிபிக் ஆகிய இரு பெருங் கடல்களை இணைக்கிறது. இதன் நீளம் $50\frac{3}{4}$ மைல். இது 1914 ஆகஸ்ட் 3-ஆம் நாள் திறக்கப்பட்டது. இக் கால்வாயை வெட்ட $7\frac{1}{2}$ கோடி பவுன் (100 கோடி ரூபாய்) செலவாயிற்று. இக் கால்வாய் வழியே செல்லும் கப்பல்களை மின்சாரத்தால் இயங்கும் (Cogtrack Locomotives என்னும்) ஒருவகை இயந்திரத்துடன் கட்டி விடுவார்கள்; அது கப்பல்களை இந்த $50\frac{3}{4}$ மைல் தொலைவை 12 மணி நேரத்தில் இழுத்துக்கொண்டு போய்விடுகிறது. இக்கால்வாய் ஏற்படாதிருந்தால் கப்பல்களும் கடற்படையும் இன்னும் 8000 மைல் சுற்றிவர வேண்டியதிருக்கும். இப்பகுதியில் அமெரிக்காவின் கடற்படைத் தளங்களும் விமானப்படைத்தளங்களும் உள்ளன. அமெரிக்க ஐக்கிய இராச்சிய அரசின் பெருமுயற்சியாலும், பணச்செலவாலும் இக் கால்வாய் உருவாயிற்று. இதை வெட்டும் வேலையில் நோய் நொடியால் 20,000 பேர் இறந்தனர்.

மாகப் பெரிதாகியிருக்கிறது. நிலக்கரி ஏராளமாக இங்கிருந்து ஏற்றுமதி செய்யப்படுகிறது.

**குயூபக்**

வரலாற்றுப் புகழும் வனப்பூட்டும் அமைப்பும் உடைய இந்நகர் குயூபெக் மாநிலத்தின் தலைநகர். இந் நகரில் ஒரு மேட்டூரும் ஒரு பள்ளத்தூரும் உள்ளன. இப் பகுதிகளில் ஒன்றிலிருந்து மற்றொன்றுக்குச் செல்ல 'எலிவேட்டர்' என்னும் இயந்திரத்தில் செல்ல வேண்டும். அல்லது வளைந்தும் நெளிந்தும் கோணியும் செல்லும் நீண்ட நெடுஞ்சாலைகளைக் கடக்க வேண்டும்.

**வின்னிபெக்**

அமெரிக்காவில் சிக்காகோ நகரம்போலக் கனடாவில் இந்நகரம், பல மாநிலங்களின் வணிக வாயிலாகவும் உற்பத்திப் பொருள்களை வழங்கும் நகராயும் இருக்கிறது. உள்ளுவதெல்லாம் உயர்வுள்ளும் மனநிலை இந்நகர் வாழ் நர்க்கு உண்டு. "எதையும் மிகப் பெரிதாகச் செய்ய வேண்டும்; இதைவிடப் பெரிது கனடாவில் இல்லை என்ற புகழ் அடைய வேண்டும்; செய்வன திருந்தச் செய்ய வேண்டும்" என்ற கருத்து இவர்கட்கு உண்டு. அக் கருத்தை நிறைவேற்றத் தேவைப்படும் செல்வமும் இருக்கிறது.

**நயகரா நீர்வீழ்ச்சி**

இயற்கை அன்னை தம் வளத்தை வாரி வழங்கியுள்ள பகுதி நயகரா நீர்வீழ்ச்சி. மேகம் பொத்துக்கொண்டு வருவது போல, இங்கு நீர் பொழிவதாலும், அது பொழி யும் ஓசை பத்துமைல் தொலைவுக்குக் கேட்பதாலும், இதனை 'அருவி' என்று கூறுதற்கில்லை. நயகராவில் நீராடுதல் நினைக்கவும் இயலாத ஒன்று.

பார்த்து மகிழவும், பயன்படுத்தி வளப்படுத்தவும், நயகரா நீர்வீழ்ச்சி கனடாவுக்கும் அமெரிக்காவுக்கும் உதவுகிறது. இதன் நீளம் 4000 அடி. (குற்றால அருவியின் நீளம் 200 அடி இருக்கலாம்); இந்த நீர்வீழ்ச்சி இரு பகுதிகளாக இருக்கிறது. அமெரிக்கப் பகுதியிலுள்ள நீர்வீழ்ச்சியின் தொலைவு 1400 அடி; உயரம் 165 அடி. கனடாப் பகுதியில் 2600 அடி; உயரம் 155 அடி.

## 7. மக்கள்

கனடாவின் மக்கள் தொகை ஒரு கோடி எண்பது லட்சம். அதாவது தமிழ்நாட்டின் மக்கள் தொகையில் 5-இல் 3 பங்கு. இந்தியாவைப்போல மூன்று மடங்கு பரப்புள்ள நாடு என்பதை முன்னரே குறிப்பிட்டுள்ளோம்.

ஐக்கிய அமெரிக்க நாடுகளுடன் ஒப்பிட்டுப் பார்த்தாலும் கனடாவின் பரப்பு கூடுதலாகவும் மக்கள் தொகை பத்தில் ஒரு பங்காகவும் இருக்கிறது.

கனடா மக்களில் பாதிப்பேர் பிரிட்டனிலிருந்து வந்தவர்கள்; அல்லது அவர்களுடைய வழித்தோன்றல்கள் ஆவர். 100-க்கு 30 பேர் பிரான்சிலிருந்து குடியேறினவர்; ஜெர்மனியிலிருந்தும் ஹாலந்திலிருந்தும் வந்தவர் 100-க்கு 5 பேர்; உக்ரெயினிலிருந்தும் போலந்திலிருந்தும் வந்தவர் 100-க்கு 4 பேர் இருக்கலாம். இவர்கள் தவிர, இன்னும் இருபத்தேழு நாட்டினர் கனடாவில் குடியேறியுள்ளனர். எஸ்கிமோக்கள் என்ற பழங்குடி மக்கள் பல்லாயிரவர் உள்ளனர். சீனர் ஜப்பானியர் 50,000 பேரும், நீக்ரோக்கள் 22,000 பேரும் இருக்கிறார்கள். இந்தியாவிலிருந்து குடியேறியவர்களும் உள்ளனர்.

கனடாவில் வாழும் முக்கியமான ஓர் இனம் சிவப்பு இந்தியர், அல்லது செவ்விந்தியர். இவர்கள் போனீசியா

பகுதியிலிருந்து பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன் கனடாவில் குடியேறிய பழங்குடி மக்கள் ஆவர். இவர்கள் தொகை ஒரு லட்சம் இருக்கும்.

ஐரோப்பியர் அமெரிக்காவையும் கனடாவையும் கண்டபோது அந்நாடுகளை இந்தியா என்று எண்ணினர்; அங்கே அவர்கள் கண்ட மக்களை இந்தியர் என்று அழைத்தனர். அவர்கள் இந்தியர் அல்லர் என்பதை உணர்ந்த பின்னர் 'சிவப்பு இந்தியர்'; 'அமெரிக்க இந்தியர்' என்ற பெயர்களால் அவர்களையும் 'கிழக்கு இந்தியர்' என்ற பெயரில் நம் நாட்டினரையும் பாஸ் போர்ட் முதலியவற்றில் குறிப்பிட்டு வருகின்றனர்.

**மதம்**

கனடா மக்களில் 100 பேருக்கு 54 பேர் பிராடஸ்டண்டு கிறித்தவராகவும், 43 பேர் கத்தோலிக்கராகவும் இருவர் யூதராகவும் உள்ளனர். புத்த சமயத்தவர் 40,000 பேர் கனடாவில் வாழ்கின்றனர்.

**மொழி**

கனடாவில் இரண்டு மொழிகள் பேசப்படுகின்றன— ஒன்று ஆங்கிலம், மற்றொன்று பிரெஞ்சு. பாரிஸ்நகரத்துக்கு அடுத்தபடி பிரெஞ்சு மொழி பேசுபவர் மிகுதியாக உள்ள பெருநகரம் மான்ட்ரீல் தான். ஐக்கிய அமெரிக்க நாடுகளில் ஆங்கிலம் மட்டுமே பேசப்படுவதும் அதன் அண்டை நாடாகிய கனடாவில் இரு மொழிகள் நிலவி வருவதும் சிறப்பாகக் கவனிக்கத் தக்கது. இவ்விரு மொழிகளுமே ஆட்சி மொழியாக உள்ளன. கனடாப் பாராளுமன்றத்திலும் நீதி மன்றங்களிலும் இரு மொழிகளுக்கும் சம உரிமை உண்டு. பிரெஞ்சைத் தம் மொழியாக உள்ளவர் தொகை ஆங்கில மொழியினரின் எண்ணிக்கையில் நான்கில் ஒரு பங்குதான். அவ்வாறிருந்

தும் சிறுபான்மையினரான பிரெஞ்சு மொழியாளருக்குப் பொதுவாழ்வில் ஒத்த நிலை வழங்கப்பெற்றிருத்தல் பாராட்டுக்கு உரியது; முன்னேற விரும்பும் நாடுகள் பின்பற்றத்தக்கது.

இந்த இரண்டு மொழிகளும், பேசத்தெரிந்தவர்கள் 15 லட்சம் பேர் கனடாவில் இருக்கின்றனர். டாலர் நோட்டுகளிலும் சரி, விற்பனைப் பொருள்களிலும் (சோப், தீப்பெட்டி முதலியவற்றில் கூட) சரி இரு மொழிகளும் அச்சிடப்பெற்றுள்ளன.

ஒரு நூற்றாண்டுக்கு முன்பு குயூபக் பகுதியில் மட்டும் வாழ்ந்து வந்த பிரெஞ்சு பேசும் கனேடியர், இப்போது கனடாவின் பலபகுதிகளிலும் பரவியுள்ளனர். பரம்பரைப் பழக்கம், மொழிப்பற்று, கத்தோலிக்க சமயத்தில் ஈடுபாடு, பாதிரிமார்களிடம் கல்விகற்றல் ஆகியவற்றில் பிரெஞ்சுக்காரர்கள் தனி இனமாகவும் கட்டுப்பாடுடனும் வாழ்ந்து வருகின்றனர். இவர்கள் தொகை பெருகி வருகிறது. என்றைக்காவது ஒரு நாள் இவ்வினத்தவர் கனடாவில் பெருபான்மையராக ஆகிவிடுவர் என்று சிலர் கருதுகின்றனர். போர்க்காலத்தில் ஆட்களைப் படையில் சேர்த்தல், குடும்பத்தின் அளவைக் குறைக்கக் கருத்தடை செய்தல் ஆகியவற்றை இவர்கள் எதிர்க்கிறார்கள்.

## 8. கனடாவாழ் இந்தியர்

கனடாவில் ஈராயிரம் இந்தியர் இருக்கிறார்கள். இவர்களில் அநேகமாக எல்லோருமே பஞ்சாப் இராச்சியத்தைச் சேர்ந்த சீக்கியர்கள்தாம்.

சீனாவிலுள்ள ஷாங்ஹாய் நகரிலும் சீன எல்லையிலுள்ள ஹாங்காங் தீவிலும் வாழ்ந்த சீக்கியர் கனடா

வில் தங்கச் சுரங்கங்கள் கண்டு பிடிக்கப்பட்ட போது (1866-1905) அங்கிருந்து கனடாவுக்குக் குடியேறினர். சுரங்கங்களிலும் தோட்டங்களிலும் தொழிலாளராக இருந்தனர்; உழைப்பின் உருவமாக விளங்கினர்; வெள்ளையரின் பாராட்டுக்கு ஆளாயினர். இந்த நூற்றுண்டின் தொடக்கத்தில் கனடாவில் ஆறுயிரம் இந்தியர் இருந்ததாகத் தெரிகிறது. 1909 முதல் இந்தியர் மீது சில தடைகள் விதிக்கப்பட்டன; அதன் பின்னரே இந்தியர் அமெரிக்காவுக்குக் குடியேறலாயினர். ஐரோப்பியர் முதலில் அமெரிக்காவிலும் பிறகு கனடாவிலும் குடியேறினர். இந்தியர் முதலில் கனடாவிலும் அதன் பின்னர் அமெரிக்காவிலும் குடியேறலாயினர்.

கடந்த சில ஆண்டுகளாக—இந்தியா சுதந்தரம் பெற்றதன் பயனுக—இந்தியர் கனடாவில் குடியேற கனடா அரசியலார் இசைந்துள்ளனர். பெருவாரியாக இந்தியர் குடியேறினுல் தங்களுடைய வாழ்க்கை நிலைக்கு ஆபத்து வந்துவிடும் என்ற அச்சம் அவர்களுக்கு இருக்கிறது; தென்ஆப்பிரிக்காவில் நிலவுவது போன்ற இனக் கிளர்ச்சிகள் வலுத்து விடுமோ என்ற நினைப்பும் இருக்கிறது. ஒரேயடியாகக் குடியேற்றத்தைத் தடைசெய்யவும் அவர்களுக்குத் துணிவு இல்லை; அத்தகைய செயலால் ஏற்படக்கூடிய விளைவுகளையும் கனடா அரசியலார் நன்குக உணர்ந்திருக்கிருர்கள். அதனுல், ஆண்டுதோறும் இந்தியர் சிலருக்குக் கனடாக் குடி உரிமை கொடுத்து விடுகிருர்கள். 'கோட்டா' முறை என்பது இதுவே. இவ்வாறு குடி உரிமை பெற விரும்புபவர்க்குக் கனடாவில் யாராவது பொறுப்புச் சொல்லிக் கொள்ள வேண்டும். கனடாவில் போய்ச் சேர்ந்ததும் அவர்களுக்கு வேலையும் தகுந்த வருவாயும் கிடைக்கும் என்பதற்கு ஆதாரங்கள் கனடா அரசியாலரிடம் காட்டப்பட

வேண்டும். இக்காரணங்களால் ஏற்கனவே, கனடாவில் குடியேறி வாழ்ந்து வருபவர்களின் நண்பரும் உறவினருமே புதிதாகக் குடி உரிமை பெறுகின்றனர்.

கனடா வாழ் இந்தியர் அனைவருமே பிரிட்டிஷ் கொலம்பியா என்ற மாநிலத்தில்தான் இருக்கின்றனர் என்று சொல்லலாம். இங்கு சீக்கியர் கோயில்கள் இரு இடங்களில் இருக்கின்றன. இவர்கள் தலைப்பாகையும் ஆங்கிலேய உடையும் அணிந்து கொள்கின்றனர்; இந்திய உணவை உண்ணுகின்றனர்; இறந்தவர்களை எஃகுத் தொட்டியில் வைத்து மின்சாரத்தால் எரித்து விடுவர். இவர்கள் வியாபாரிகளாகவும், சிறு பண்ணைகளின் உரிமையாளராகவும் மர ஆலைத்தொழிலில் ஈடுபட்டவராகவும் உள்ளனர். வளமான வாழ்க்கை வாழ்ந்து வருகின்றனர். ஒரு சிலர் கனேடியப் பெண்களை மணம் செய்துள்ளனர்.

ஓராண்டுக்கு நூறு இந்தியர்தான் கனடாக் குடி உரிமை பெறலாம் என்று 1956-வரை சட்டம் இருந்து வந்தது. 1957 ஜனவரி முதல், இது 300 ஆக உயர்த்தப்பட்டிருக்கிறது. இன்னும் சில ஆண்டுகளில் இந்த எண்ணிக்கை மேலும் மிகுதியாக்கப் படலாம். இந்த 300 பேரில் 150 பேர் மட்டுமே ஏற்கனவே கனடாவில் உள்ளவர்களின் உறவினராகவோ உறுதுணை உடையவர்களாகவோ இருக்கலாம். எஞ்சிய 150 பேர், இந்தியாவிலேயே தேர்ந்தெடுக்கப்படுகிறார்கள்.

## 9. பழக்க வழக்கங்கள்

கனடா மக்களுடைய பழக்கவழக்கங்கள் யாவும் அமெரிக்கரைப் பின்பற்றி அமைந்துள்ளன. அவர்கள் பேசும் ஆங்கிலத்தின் உச்சரிப்பு அமெரிக்கருடைய உச்சரிப்பைப் போன்றது, அவர்கள் பார்ப்பது அமெரிக்கத்

திரைப்படங்களும் அமெரிக்கத் தொலைக் காட்சிகளும் தாம். அமெரிக்காவைப் போலவே, கனடாவிலும் பட்டம் வழங்கும் பழக்கம் கிடையாது. அமெரிக்காவில் உள்ளது போலவே, கனடாவிலும் எல்லா வாகனங்களும் சாலையின் வலது பக்கமாகவே ஓட்டப்படுகின்றன.

கனடாப் போலீசுக்கு 'மௌன்டீஸ்' (Mounties) என்று பெயர். பரந்து விரிந்து கிடைக்கும் இப்பெரு நாட்டுக்கு 4500 மௌன்டீஸ்தான் இருக்கின்றனர். இவர்கள் 800 கார்களையும் 144 குதிரைகளையும் பல படகுகளையும் ஆகாய விமானங்களையும் பயன் படுத்தி, நாடெங்கும் நாள்தோறும் அமைதி நிலவச்செய்து வருகின்றனர். இவர்களுக்கு உரிய உடையை, நீதி மன்றங்களில் வாக்கு மூலம் கொடுக்கும்போது மட்டுமே அணிவர்.

அமெரிக்கரை நோக்க, கனடா மக்கள் சற்று பிற்போக்கானவர்கள் , பழமை விரும்பிகள். ஸ்காட்லாந்தியருடைய சிக்கனமான குணங்களும் அவர்களிடம் உள்ளன. பிரெஞ்சு பேசும் கனடா மக்களும் ஆங்கிலம் பேசும் கனடா மக்களும் தனித்தனியே வாழ்கின்றனர். அவர்களுக்குள் கலப்பு மணம் நடப்பது அருமையிலும் அருமையே.

## 10. விவசாயம்

1904க்குப் பிறகு சிறு அளவிலும் 1939க்குப் பின்னர் பெரிய அளவிலும் புதிய தொழில்கள் ஏற்பட்டுள்ள போதிலும் கனடாவின் விவசாய முக்கியத்துவம் குறைந்து விடவில்லை. விவசாயத் தொழிலை ஒட்டி, காடு வளர்த்தல், காடுகளில் கிடைக்கும் சவுக்குமரங்களையும் பிற பொருள்களையும் வெட்டுதல் ஆகிய தொழில்களில் கனேடியர் சிறந்துள்ளனர்.

ஆல்பர்டா, மனிடோபா, சஸ்கெசவான் ஆகிய மாநிலங்கள் சமவெளிப்பகுதியாக இருக்கின்றன.

மண் வளத்தால் இம்மாநிலங்கள் சிறந்து விளங்குகின்றன. கனடாவின் உணவுக் களஞ்சியம் என்று இவற்றைக் குறிப்பிடுவது சாலவும் பொருந்தும். வேளாண்மைத் துறையில் கனடா, உலகத்திலேயே மூன்றாவது நாடாக இருந்துவருகிறது. கோதுமை பயிரிடுவது நீங்கலாக, பார்லி, ஓட்ஸ் என்னும் சீமை அவல், ஆகிய பயிர்களை விளையச்செய்தும் கால்நடை வளர்த்தும் பால் பண்ணைகள் நிறுவியும் வருகின்றனர். குதிரைகளும் கோழிகளும் கனடாவின் குறிப்பிடத்தக்க ஏற்றுமதிகளாக இருந்து வருகின்றன. மீன் ஏற்றுமதியும் பெருகிவருகிறது. 'லாப்ஸ்டர்' என்ற மீன் கடலில் பிடிக்கப்படுகிறது. பார்ப்பதற்கு நண்டுபோல இருக்கும் இந்த வகை மீனுக்கு நீண்டு வளர்ந்த வால்கள் உண்டு. இதன் எடை 8முதல் 12 பவுண்டு; சாப்பிடச் சுவையாக இருக்கும். இதைத் தகரங்களில் அடைத்து விற்கிறார்கள். யாராவது ஒரு கனேடியர் உங்களுக்குப் படைக்கும் உணவில் லாப்ஸ்டரும் இருந்தால் உங்களை அவர் பெரிய மனிதராக நினைத்திருக்கிறார் என்று பொருள்.

தேனொழுகக்கனிந்து நாவுக்கு நல்விருந்தாக உள்ள பழங்கள் கனடாவில் குறைவின்றி உள்ளன. எனினும், பழங்கள் எக்காலத்தும் உண்டாவதில்லை. மனிதனோ, எல்லாச் சுவைகளையும் எக்காலத்தும்—எல்லா மாதங்களிலும் நுகர விரும்புகிறான். கனிகள் அழுகாமல்இருக்குமா? எனவே, அவற்றைப் பக்குவப்படுத்தி, சாறுஎடுத்து ஊறுகாய் போலப் போட்டு இத் தித்திப்புகளைத் தகரங்களில் அடைத்து அத்தகரங்களை குளிரூட்டும் கருவிகளில் வைத்திருந்து என்றும் எங்கும் சுவை குன்றாதவாறு பேணி வருகின்றனர். இதற்கு 'கானிங்' தொழில் என்று பெயர். இதுவும் கனடாவில் சிறந்து விளங்கிவருகிறது.

# 11. தொழில் வளர்ச்சி

1878 முதல் கனடாவில் சுரங்கத் தொழில்களும் 1904 முதல் பிற தொழில்களும் தொடங்கப்பட்டு வந்திருக்கின் றன. ஆயினும், இரண்டாம் உலகப் போர்க் காலத்தில் கோடிக்கணக்கான டாலர் மதிப்புள்ள பொருள்களை அமெரிக்காவும் இங்கிலாந்தும் கனடாவில் வாங்கின. அதனால் நூற்றுக்கணக்கான புதிய தொழில்கள் கனடா வில் ஏற்பட்டன. ஒண்டாரியோவும் குயூபக்கும்தான் தொழில் வளர்ச்சியில்—நம் நாட்டில் மஹாராஷ்டிரமும் (பம்பாய்) வங்காளமும் பீஹாரும் போல—பெரு முன்னேற்றம் அடைந்துள்ளன. பிரிட்டிஷ் கொலம்பியா மாநிலம் இப்போது—நம் தமிழ்நாட்டைப்போல—தொழில் வளர்ச்சி வேகத்தில் முதற் கட்டத்தைக் கடந்துவிட்டது.

கனடாவின் முக்கியமான தொழில்கள் காகிதம், மரக்கூழ் உற்பத்தி, மின்சாரக் கருவிகள் செய்தல், மரம் அறுக்கும் ஆலைகள், உலோகங்களைச் சுத்தப்படுத்தல், மோட்டார் கார் செய்வது, இயந்திரங்களை உருவாக்குவது, கொதி கலங்கள், ஆகாய விமானங்கள், குளிர் சாதனப் பெட்டிகள் முதலியன செய்தல்.

கனடாவின் உற்பத்தியில் ஐந்தில் நான்கு பங்கு அந்த நாட்டிலேயே செலவாகி விடுகிறது. எஞ்சிய ஒரு பங்கு மட்டுமே வெளிநாடுகளுக்கு விற்பனையாகிறது. எனினும், வெளிநாட்டு வாணிகத்தில், அமெரிக்கா, பிரிட்டன், ரஷ்யா இம் மூன்றுக்கும் அடுத்துப் பெரிய அளவில் பொருள் களைக் கனடா ஏற்றுமதி செய்துவருகிறது. காகித ஏற்றுமதியிலும் உற்பத்தியிலும் கனடாவுக்கு ஒப்பாரும் மிக்காரும் இல்லை. இதற்கு உறுதுணையாக இருப்பது பெரிய அளவில் பரவியுள்ள கால்வாய்ப் போக்குவரத்தும்

அதனால் மலிவான கட்டணத்திற்குக் காகிதத்தை ஏற்றி அனுப்பும் வாய்ப்பு இருப்பதும் ஆகும்.

மின்சார உற்பத்தியில் உலகில் உயர் நிலையில் இருப்பது அமெரிக்கா ; அடுத்தது கனடா. மின்சார உற்பத்தியோடு மூலப் பொருள்களின் பெருக்கமும் கோடி கோடியாக வந்த அமெரிக்க மூலதனமும் ஐரோப்பா வெங்குமிருந்து வந்த மக்களின் உழைப்பும் பயன்படாது கிடந்த மண்ணும் அதனுள் உறங்கிக் கிடந்த உலோக வளமும் உருண்டு திரண்டதே இன்றைய கனடா.

கனடாவுக்கு வருவாய் தரும் மற்றொரு தொழில் வெளிநாட்டார் ஊர் பார்க்க வருவதால் கிடைக்கும் பணம் ஆகும். அமெரிக்கர் 'கண்டதே கண்டும் கேட்டதே கேட்டும்' பொழுது போக்குவதில்லை ; பிற நாடுகளைக் காண விழைவர். அதற்கு முதற்படியாகத் தம் நாட்டையும் தம் நாட்டின் தனிப் பெருங் காட்சியாக உள்ள நயகராவையும் காணுவர். நயகராவை நன்றாகப் பார்க்க வேண்டுமானால் அமெரிக்காவிலிருந்தும் பிறகு, கனடாவிலிருந்தும் ஆக இரு பக்கமாகப் பார்க்கவேண்டும். அவ்வாறு பார்த்தால்தான் ஈடு இணையற்ற இயற்கை அழகின் முழு வடிவத்தை முற்றிலும் உணரவும் அநுபவிக்கவும் இயலும். இதற்காகக் கனடா எல்லைக்குள் மிதித்த அமெரிக்கர், கனடாவின் பல பகுதிகளையும் சுற்றிப் பார்க்கின்றனர். அமெரிக்காவுக்குத் திரும்பப் போய்ச் செலவு கணக்கைப் பார்க்கும்போது, கனடாவில் செலவு செய்த தொகை, அவர்கள் கனடாவுக்குச் செல்லாமல் அமெரிக்காவிலேயே இருந்திருந்தால் ஏற்பட்டிருக்கக்கூடிய செலவு தொகையைவிடக் குறைவு என்பதை உணருகின்றனர். மீண்டும் கனடாச் செலவு மேற்கொள்ளுகின்றனர் !

# 12. பொருளாதார நிலை

நம் நாட்டில் ரிசர்வு வங்கி போல, கனடாவில் பாங்கு ஆப் கனடா என்ற வங்கியை அரசியலார் 1934–இல் தொடங்கினர். இதுவே நோட்டு அச்சிடும் வங்கி.

வியாபார முறையில் நடக்கும் பெரிய வங்கிகள் பத்து உள்ளன. இவற்றின் மொத்தவரவு செலவு 5600கோடி ரூபாய்க்குச் சமம். நமக்கு இது பெரிய தொகைதான்; இரண்டாம் ஐந்தாண்டுத் திட்டத்தின் செலவை விட ஆயிரம் கோடி கூடுதல். ஆனால், ஒவ்வொரு வங்கியும் இவ்வளவு தொகை வரவு செலவு செய்யும் தனியார் வங்கிகள் அமெரிக்காவில் ஐந்து, ஆறு உள்ளன.

கனடாவின் நாணயம் டாலர்; ரூபாய் என்பது இந்தியா, இலங்கை, பாகிஸ்தான் போன்ற பல நாடுகளில் இருப்பதுபோல, டாலர் பல நாடுகளில் நாணய மாக இருக்கிறது. எனவே, கனடா டாலர் என்றே கனடா நாணயம் சுட்டிக் காட்டப்படுகிறது. இதன் மதிப்பு ஏறத்தாழ நான்கு இந்திய ரூபாய் ஆகும். அமெரிக்க நாணயமும் கனடாவில் செல்லுபடியாகிறது.

1959-இல் கனடா அரசியலாரின் வருவாய் 4652 மிலியன் டாலர் (1875 கோடிரூபாய்); செலவு 5300 மிலியன் டாலர் (2120 கோடி ரூபாய்).

கனடாவின் மத்திய அரசியலார் அஞ்சல் நிலையங் களையும் அவற்றில் 'சேவிங்ஸ்பேங்கு' என்னும் சேமிப்பு வங்கிகளையும் அமைத்துள்ளனர். இது தவிர, ஆல்பர்டா, ஒண்டாரியோ மாநிலங்கள் தங்கள் எல்லைகளில் தாங்களே சேமிப்பு வங்கிகள் வைத்திருக்கின்றன.

# 13. போக்குவரத்து

ரயில் பாதை அமைக்கும் வேலை இந்தியாவைப் போலவே கனடாவிலும் 1840 அளவில் தொடங்கியது. 1900-க்குப் பிறகுதான் அங்கு ரயில் போக்குவரத்து மிகுதியாயிற்று. ஒரே காலத்தில் ரயில்பாதை போடத் தொடங்கியபோதிலும், (1) கனடாவில் 45,000 மைல்களுக்கு ரயில் பாதை* போடப்பட்டிருக்கிறது; இந்தியாவில், 35,000 மைல்களுக்கே ரயில் பாதை இருக்கிறது. (2) கனடா இந்தியாவுக்கு ரயில் இயந்திரங்களைப் பல ஆண்டுகளாக அனுப்பிவருகிறது. கனடாவில் நாடு முழுவதும் ஒரே அளவுள்ள ரயில் பாதைகள் உள்ளன. ஒரு கோடியிலிருந்து மற்றொரு கோடிக்கு ரயில் மாறாமல் செல்லலாம். இந்தியாவில் அவ்வாறு செல்ல இயலாது. மக்கள் பிரயாணம் செய்யவும், பொருள்களை அனுப்பவும் அடிக்கடி வண்டி மாற்றியாக வேண்டும். பலவிதமான அகலங்களுள்ள ரயில் பாதைகள் இருப்பதாலேயே இந்தியாவில் இந்த ஊறு ஏற்படுகிறது. கனடாவில் 1771 மைல் தொலைவுக்கு மின்சார ரயில் பாதைகள் உள்ளன என்பதும் குறிப்பிடத் தக்கது.

உள்நாட்டுக்குள்ளும் ஆகாய விமானப் போக்குவரத்து பரவிவிட்டது. டிரான்ஸ் கனேடியன் ஏர்லயன்ஸ் கனடாவுக்குள்ளும், கனேடியன் பசிபிக் ஏர்லயன்ஸ் வெளிநாடுகளுக்கும் விமானப் போக்குவரவு நடத்தி வருகின்றன. லங்காஸ்டர் என்ற பெயருள்ள குண்டு வீசும் விமானங்களையும், ஓரத்தில் சிறகுகள் உள்ளதும் எதிரியின் விமானங்களை விரட்டப் பயன்படுவதுமாகிய மொஸ்கிடோ விமானங்களையும் போர்க்காலத்தில் கனேடியர் செய்தனர்.

---

* அரசியலாரின் ரயில் பாதையின் நீளம் 25,000 மைல்; தனிப்பட்டவர்களின் ரயில் பாதையின் நீளம் 20,000 மைல்

1949 இல் கனடாவின் பகுதியாகிவிட்ட நியூ பவுந்து லந்து மாநிலத்திலுள்ள காண்டர் விமானத்தளம் உலகி லேயே முக்கியமான விமான நிலையங்களுள் ஒன்று. ஐரோப் பாவுக்கும் அமெரிக்காவுக்கும் இடையே விமானங்கள் அவசர காலத்தில் பயன்படுத்தக்கூடிய விமான நிலையம் அட்லாண்டிக் பெருங் கடலில் இது மட்டுமே.

போர்க் காலத்தில் (1939—1945) இராணுவத்தின் தேவைக்காக, நாடு முழுவதையும் இணைக்கும் நெடுஞ் சாலைகள் போடும் வேலை கனடாவில் தொடங்கப்பட்டது. அந்தச் சாலைகள் அரை குறையாகப் போடப்பட்டன; அவற்றை இராணுவத்தார் பயன்படுத்த வாய்ப்பும் ஏற்பட வில்லை. ஆனால், சுற்றுலாவரும் அமெரிக்கருடைய மோட டார் கார்கள் அந்தச் சாலைகளில் சென்றன. அவர்கள் விருப்பத்திற்கிணங்க, மலைகளைக் குடைந்தும் வயல்களிற் புகுந்தும், பள்ளத்தாக்குகளில் பாய்ந்தும் அழகிய காட்சி களைக் காண்பதற்கு ஏற்புடையதாக 4470 மைல் நீளத் திற்குக் கனடாவெங்கும் சாலைகள் போட்டு 1960–இல் முடிக்கப்பட்டுள்ளன. பணம் பத்துஞ் செய்யும் அன்றோ?

## 14. விஞ்ஞான வளர்ச்சி

கனடாவின் விஞ்ஞான வளர்ச்சியில் குறிப்பிடத் தக்கது அணு மின்சார நிலையம் அமைத்திருப்பதாகும். ஆட்டவா ஆற்றங்கரையில்—ஆட்டவா நகருக்கு 150 மைல் வட மேற்கே—இந்த நிலையம் 1958-இல் ஏற்படுத்தப் பட்டது. 10 முதல் 250 கிலோவாட் வரை உற்பத்தி செய்யும் 'ரீயாக்டர்' ஒன்றும், 40,000 கிலோவாட் உற்பத்தி. ஆற்றலுள்ள மற்றொரு ரீயாக்டரும், 200,000 கிலோவாட் உற்பத்தி ஆற்றலுள்ள மூன்றாவது ரீயாக் டரும் சாக் ஆற்றங்கரையில் அமைக்கப்பட்டுள்ளன.

இந்தியாவில் பம்பாய்க்கு அருகேயுள்ள டிராம்பேயில் ஓர் அணு ஆராய்ச்சி நிலையம் இருக்கிறது. இங்கு, இந்தியாவும் கனடாவும் சேர்ந்து NRX என்ற ரியாக்டரை* அமைத்துள்ளனர். இது 1960-இல் இயங்கும். இதனால் மருத்துவத் துறையில் பெரும் பயன் தரும் ரேடியோ ஐசோடைப் கிடைக்கும், பௌதிகத் துறையிலும் பொறி இயல் துறையிலும் ஆராய்ச்சிகள் செய்யவும் வாய்ப்பு ஏற்படும்.

பாலிதீன் என்னும் ஒருவகைப் பிளாஸ்டிக் பொருளையும் கான்சர் நோயைப் போக்கக்கூடிய 'கோபால்ட்' என்னும் கருவியையும் கனேடியர் கண்டு பிடித்துள்ளனர்.

## 15. கல்வி

வேலை பார்த்துக்கொண்டே படிப்பதற்கு உதவியாக மாலை நேரத்தில் நடைபெறும் தொழிற் கல்வி நிலையங்கள் ஏராளமாக உள்ளன. அரசியலார் நடத்தும் எல்லாப் பள்ளிகளிலும் பெரும்பான்மையான ஆசிரியர்கள் பெண் பாலரே. 30 பல்கலைக் கழகங்கள் உள்ளன. இவை பெரும்பாலும் மாநில அரசியலார்களால் நடத்தப் படுகின்றன. டோரன்டோ பல்கலைக் கழகமும் மக்கில் பல்கலைக் கழகமும் குறிப்பிடத் தக்கவை. குயூபெக் மாநிலத்துப் பல்கலைக் கழகங்களில் பயிற்சி மொழி பிரெஞ்சுதான்.

உறைந்த பனிக்கட்டியின்மீது 'ஹாக்கி' ஆடுவது தான் கனடாவின் தேசிய விளையாட்டு. இந்த ஆட்டத்தில் பயிலுவதற்கான வாய்ப்பு அமெரிக்கக் கல்வி நிலையங்களில் உண்டு.

---

*அப்சரா, சொலினு என்ற இரு ரியாக்டர்கள் ஏற்கனவே அங்கு உள்ளன. அவற்றுக்கும் கனடாவுக்கும் தொடர்பு கிடையாது.

## 16. இலக்கியம்

கனேடியர்களுடைய வெளியீடுகளில் குடியேற்ற நிகழ்ச்சிகள், ஆங்கில மொழி—பிரெஞ்சு மொழி பேசுவோர் உறவு ஆகியவற்றின் அடிப்படையில் அமைந்த நாவல்களும் வரலாற்று நூல்களும், கனடா பற்றிய பிரயாண நூல்களும் குறிப்பிடத்தக்கவை.

ஆங்கிலத்தைவிட பிரெஞ்சு மொழியில் கனடாவில் மொழி வளர்ச்சி பெருகியிருக்கிறது. அதன் தரமும் உயர்ந்தது கத்தோலிக்கப் பாதிரிகளின் முயற்சியும் ஆதரவும்தான் இதற்குக் காரணமாக உள்ளன. தத்துவம், சமயம், நாடகம், நுண்கலைகள் பற்றிய நூல்கள் வெளி வந்துள்ளன.

பிரெஞ்சுக்காரரும் ஆங்கிலேயரும், கத்தோலிக்கரும் பிராடஸ்டாண்டுகளும் கனடாவில்—மலேயா வாழ் மலாய், இந்திய, சீன மக்கள் போல—தனித்தனி இனத்தவராக வாழ்ந்து வருகின்றனர். அமெரிக்காவைப் போல எல்லோரும் ஓரினமாகிவிடவில்லை. இதன் பயன் அமெரிக்கருக்கு என்று இலக்கிய மரபு, பண்பாடு, கலைச் சிறப்பு ஆகியவை தனியாக உண்டு கனேடியருக்கு அவை இனி உருவாக வேண்டும். அதற்காக 1958-இல் ஏற்பட்ட 'கனடா கவுன்சில்' (இந்தியாவில் சாகித்திய அகாடமி, சங்கீத நாடக அகாடமி, லலிதகலா அகாடமி போன்றது) புதிய இலக்கியங்களையும் சிம்பனி ஆர்க்கெஸ்ட்ராவையும் பாலே நடனத்தையும் பரப்புகிறது

## 17. கனடாவும் பிரிட்டனும்

கனடா வாழ் மக்களில் பிறநாடுகளிலிருந்து குடியேறியவரைவிட பிரிட்டனிலிருந்து குடியேறியவரே மிகுதி. (பிரான்சு தவிர) ஏனைய ஐரோப்பிய நாடுகளிலிருந்து

வருபவர்களும் இந்த இனத்தவராக ஆகிவிடுகின்றனர். இதனால், கனடா மக்களில் பெரும்பாலோர்க்கு 'ரத்த பாசம்' உண்டு. இந்த உணர்வு வலுப்பதற்கு பிரெஞ்சுக் கனேடியர்கள் தடையாக இருப்பதில்லை. அமெரிக்காவுடன் நல்லுறவோடு வாழ்வதுபோலப் பிரிட்டனுடனும் நெருங்கிய உறவு கொண்டிருப்பது கனடாவுக்கு இன்றியமையாததாகிவிட்டது.

அரசியார் நியமிக்கும் கவர்னர் ஜெனரலே கனடாவின் ஆட்சித் தலைவராக அரசியின் பிரதிநிதியாக இருந்து வருகிறார். மக்கள் ஆதரவுபெற்ற அமைச்சரவை நாட்டை ஆளுகிறது.

ஆபத்துக் காலத்தில் உதவிபெறும் சலுகை பிரிட்டனுக்குக் கனடாவில் உண்டு. கனடாவின் உலோக வளம்தான் பிரிட்டனுக்கு 1939–1945 போரில் பெரிதும் பயன்பட்டது.

## 18. கனடாவும் அமெரிக்காவும்

அமெரிக்காவுக்கும் கனடாவுக்கும் இருப்பது போன்ற 3987 மைல் நீளமான எல்லை உலகில் வேறு எந்த நாடுகளுக்கிடையேயும் கிடையாது ; எல்லைத் தகராறு என்பது எள் அளவுமின்றி இத்துணைச் சுமுகமான உறவு உடைய நாடுகளும் உலகில் கிடையாது. ஏழு கனேடிய மாநிலங்களும், பதின்மூன்று அமெரிக்க இராச்சியங்களும் இந்த எல்லையில் சந்திக்கின்றன. 150 இடங்களில் அமெரிக்க—கனடா சாலைகளும் பாலங்களும் உள்ளன. அவை வாயிலாக ஒரு கோடிப்பேர் ஒவ்வோர் ஆண்டும் ஒரு நாட்டிலிருந்து மற்றொரு நாட்டுக்குச் செல்லுகின்றனர். அவ்வாறிருந்தும் மருந்துக்குக்கூட ஒரு நிகழ்ச்சி நடந்ததில்லை. (இமயமலை இடையே இருந்தும் இந்திய–சீன எல்லை படும்பாடு நாம் அறிந்ததே) சுங்கச் சோதனை

பாஸ்போர்ட் சரி பார்ப்பது ஆகிய சடங்குகள் 10 நிமிடங்களில் முடிவடைந்து விடுகின்றன.

இத்தகைய ஓர் எல்லை இருப்பதாகவே அமெரிக்கர் நினைப்பது கிடையாது. அவர்களுக்கு அமெரிக்காவைப் போலக் கனடாவும் சொந்த நாடுதான் என்ற எண்ணம் இருக்கிறது. கனடா அமெரிக்காவின் 51-ஆவது இராச்சியம் என்று வேடிக்கையாகச் சொல்லுவதுண்டு.

ஆனால், கனடா மக்களுக்கு இந்த எல்லைக்கோடு மிக முக்கியமானது. அவர்களுடைய நாணயத்துக்கும் அமெரிக்க நாணயத்தைப் போல டாலர் என்று பெயர் இருந்தாலும், கனடா டாலருக்கு மதிப்புக் குறைவு. ஐந்து கனடா டாலரைக் கொடுத்தால், நான்கு அமெரிக்க டாலர் தான் கிடைக்கும். இதனால், கனடாமக்கள் அமெரிக்காவில் வாங்கும் பொருள்களுக்கும், அங்குச் சுற்றுப்பயணம் செய்யும்போது ஏற்படும் செலவுகளுக்கும் கூடுதலான பணம் கொடுக்க நேரிடுகிறது. அதே காரணத்தால் அமெரிக்க வணிகர் தங்கள் தொழில்களின் கிளைகளைத் தனி கம்பெனியாகக் கனடாவில் அமைத்து வருகின்றனர். கனடாவில் உற்பத்திச் செலவு குறைவு ; வரியும் குறைவு ; அதனால் இலாபம் கூடுதல்.

ஓரிடத்தில் நயகரா அருவி எல்லையாக இருக்கிறது. பிறிதோரிடத்தில் ஓர் ஏரி. இன்னும் ஓர் இடத்தில் ஒரு மலை. ராக் ஐலண்டு என்ற கனேடிய நகரில் ஒரு நூல் நிலையம் இருக்கிறது. அதில் நூல் நிலைய அலுவலகம் கனடா எல்லையையும், நூல்கள் அடுக்கி வைக்கப் பெற்றுள்ள பகுதி அமெரிக்க எல்லையையும் சேர்ந்தனவாம். இன்னொரு வீட்டில், ஒருவர் படுக்கும் அறைக்குள் எல்லைக்கோடு இருக்கிறது. அவர் தலை உள்ள இடம் அமெரிக்காவையும் அவர் பாதம் படும் பகுதி கனடாவையும் சேர்ந்ததாம். கிழக்கு மேற்கில் செல்லும் 49-ஆவது

வடக்கு அட்சரேகை என்ற நேர் கோடு (49th Parallel) அமெரிக்க—கன்னடா எல்லை.

கலே என்ற கனேடிய நகரிலுள்ளவர்கள் தங்கள் மனைவிமார் மகப்பேறு பெற அருகேயுள்ள (அமெரிக்க நாட்டு) சென்ட் ஸ்டீபன் நகரிலுள்ள மருத்துவ நிலையத்துக்கு அனுப்பி விடுவார்களாம். குழந்தை அங்கு பிறந்தால், அமெரிக்கக் குடியரசுத் தலைவராக வருவதற்கு வாய்ப்பு இருக்கிறதல்லவா?

## 19. கனடாவும் இந்தியாவும்

இந்தியா குடியரசு நாடாக ஏற்பட்டபோது, குடியரசுகளுக்கும் காமன்வெல்த்தில் இடம் தரவேண்டும் என்று உறுதியாகத் தெரிவித்துச் சிக்கலான நிலைக்குத் தீர்வு கண்டவர்கள் காமன்வெல்த் கூட்டங்களில் கலந்து கொண்ட கனடா அமைச்சர்களே.

கொழும்புத் திட்டத்தில் * சேர்ந்து கனடா, ஆசியாவிலுள்ள பிற்பட்ட நாடுகளுக்கு நிதி வழங்கி வருகிறது. 1959 வரை கொழும்புத் திட்டத்துக்குக் கனடா 100 கோடி ரூபாய் உதவியளித்திருக்கிறது. 1960 முதல் ஆண்டுதோறும் ஐந்து கோடி கனடா டாலர் தொகையை (இரண்டு கோடி 40 லட்சம் ரூபாய்) கனடா அரசியலார் செலவிட்டு வருகின்றனர்.

---

*1950 ஜனவரியில பிரிட்டன, கனடா, ஆஸதிரேலியா, நியூசிலநது, இந்தியா, பாகிஸதான இலங்கை ஆகிய நாடுகளின வெளிநாட்டமைச்சாகள் இலங்கையின தலைநகரான கொழுமபு மாநகரில கூடி ஆசிய நாடுகளின் பொருளாதார நிலையை ஆராயநது ஒருவர்க கொருவா உதவிசெயயும திட்டம் வகுக்க இசைநதனர். இதுவே 'கொழுமபுத திட்டம' எனப்படும்.

உதவி வழங்கும் நாடுகளாக பிரிட்டன, கனடா, ஆஸ்திரேலியா, நியூசிலநது ஆகிய நானகு நாடுகளும திடடம தொடங்கிய 1950-ஆம ஆண்டு முதல கலநது கொணடிருககினறன. 1951 இல அமெரிககாவும 1954-இல் ஜப்பானும இததிடடததில சேரநதுகொண்டு தாங்களும தென் கிழகககு ஆசிய நாடுகளுககு உதவமுனவநதுளளன,

1959 முடிய செலவான 100 கோடி ரூபாயில் 60 கோடி ரூபாய் இந்தியாவில் செலவிடப்பட்டிருக்கிறது. இது தவிர, கனடாவில் கோதுமை வாங்குவதற்கு ஒரு கோடி ரூபாயை அன்பளிப்பாகவும் ஒரு கோடி அறுபது லட்சம் ரூபாயைக் கடனாகவும் வழங்கியிருக்கிறது.

கனடா இந்தியாவுக்கு உதவி செய்திருப்பதில் குறிப்பிடத் தக்கவை மூன்று அணைத்திட்டங்கள். குண்டா: (தமிழ்நாடு), மயுராக்ஷி (மேற்கு வங்கம்), உம்துரு (அசாம்). இம்மூன்றிலும் பெரியது குந்தாத் திட்டமே. நீலகிரி மலையிலுள்ள ஆற்று நீரைக்கொண்டு மின்சாரம் உற்பத்தி செய்ய இத்திட்டம் மேற்கொள்ளப்பட்டிருக்கிறது. இதனால், தமிழ்நாட்டின் மின்சார வளம் பெருகி தொழிலும் விவசாயமும் சிறப்படையும். இந்தத்திட்டத்திற்கு—இதன் முதல் கட்டத்திற்கு—12 கோடி ரூபாய் மதிப்புள்ள இயந்திரங்களைக் கனடா அன்பளித்தது. கனடா நாட்டு மின்சார நிபுணர் சிலரும் இங்குவந்து 1958 முதல் பணியாற்றி வருகின்றனர். இந்தியாவுக்கும் கனடாவுக்குமிடையே ஓராண்டுக்கு 60 கோடி ரூபாய் மதிப்புள்ள வியாபாரம் நடைபெறுகிறது.

மெயில், எக்ஸ்பிரஸ் ரயில்களை இழுக்கும் இயந்திரங்கள் 120-ஐயும், கொதிகலங்களையும் ரயில் தண்டவாளத்தை இறுகப் பிடித்துக்கொள்ளும் 'ஸ்லீப்பர்' என்னும் மரக்கட்டைகளையும் கனடா வழங்கியிருக்கிறது. 'டீசல்—மின்சாரம்' உற்பத்தி செய்யும் கருவிகளையும் கனடா தந்திருக்கிறது. தமிழ்நாட்டிலும் சில இடங்களில் குடிசைத் தொழிலுக்கும் விவசாயத்துக்கும் இவை பயன்படுத்தப்பட்டிருக்கின்றன.

கான்சர் நோயைக் குணப்படுத்த உதவும் ரேடியோ ஆக்டிவ் கோபால்ட் தெரபி கருவிகளில் ஆறு கருவிகள் இந்தியாவுக்கு வழங்கப்பட்டுள்ளன. இந்தியாவில் மின்

சாரக் கருவிகளைச் செய்வதற்கு ஏராளமான செப்பும் சிறிதளவு அலுமினியமும் கனடாவிலிருந்து வரவழைக்கப் படுகின்றன. இந்தியர் சில நூறு பேர் கனடாவில் தொழிற்பயிற்சி பெற்று வருகின்றனர்,

உலக அமைதியில் கனடாவுக்கு நாட்டம் உண்டு. காஷ்மீர்ச் சிக்கல் போராகப் பரவாதபடி ஐக்கிய நாடுகள் சபையின் சார்பாகக் கனடா ஓரளவு முயன்றது. உலக அமைதிக் கொள்கையைப் பரப்பிய லெஸ்டர் பியர்சன் என்ற கனேடிய வெளிநாட்டமைச்சர், தம் பணிக்காக நோபல் பரிசு பெற்றார். கனடாவுக்கு நாடுபிடிக்கும் ஆசை கிடையாது. தம்நாட்டில் வெள்ளை இனத்தவர்க்குள்ள சலுகை குறைந்துவிடக் கூடாதென கனடா மக்கள் விரும்புகின்றனர், 'உடும்பு வேண்டாம்; கையை விட்டால் போதும்' என்பதே அவர்கள் கொள்கை.

## 20. செண்ட் லாரன்ஸ் கடற்பாதை

கடல்வளம் மிகுந்த கனடாவுக்கு அமெரிக்காவுடன் போக்குவரத்து பெருகியிருக்கிறது. இரு நாடுகளிலும் தொழில் வளர்ச்சி விரைந்து வளர்ந்திருப்பதால் பொருள்களை மலிவாக அனுப்ப, துறைமுக வசதியைக் கூடுதலாக்க வேண்டிய நிலை ஏற்பட்டது. எல்லா ஏரிகளையும் இணைத்து, அதன் வாயிலாகப் புதிய துறை முகங்களை உண்டாக்கக் கனடாவும் அமெரிக்காவும் இசைந்தன.

சில ஏரிகளுக்கு நடுவேயுள்ள ஊர்களில் வாழ்ந்த மக்கள் அரசியலாருடைய செலவில், சில மைல் தொலைவுக்கு அப்பாலுள்ள இடங்களில் புதுவீடு கட்டிக் கொடுத்து அப்புறப்படுத்தப்பட்டனர். பழைய வீடுகள் இயந்திரங்களின் உதவியால் பிரித்து அவரவர்களுக்குக்

கொடுக்கப்பட்டன. பலர் இவ்வாறு பிரிக்கப்பட்ட வீடுகளையே மீண்டும் வேறு இடங்களில் தம் குடியிருப்பாக உருவாக்கினர்.

வீடுகள் பிரிக்கப்பட்ட இடங்களுக்கு அருகேயுள்ள ஏரிகளின் நீர் வெளிக் கொணரப்பட்டு, பிறகு வீடுகள் இருந்த இடங்களில் கால்வாய்கள் வெட்டப்பட்டன. ஓர் ஏரிக்கும் மற்றோர் ஏரிக்கும் தண்ணீர் செல்லுவதைக் கட்டுப்படுத்த அணைக்கட்டுகளும் மதகுகளும் அமைக்கப் பட்டன. ஓர் இடத்தில் 30 மைல் நீளமுள்ள ஓர் ஆற்றின் தண்ணீரை வற்றும்படி செய்து, அதை (செங்கற்பட்டு மாவட்டத்துப் பாலாறு, வேகவதி ஆறு போன்று) சில மாதங்களுக்குப் பாலைவனம் ஆக்கினர். சில இடங்களில் வெடி வைத்துக் கற்பாறைகளை உடைத்துக் கால்வாய் வெட்டினர். பல இடங்களில் புதிய மின்சார நிலையங்களை அமைத்தனர். சில இடங்களில் கனடாவிலிருந்து அமெரிக்காவுக்குச் செல்லப் பெரிய பாலங்களைக் கட்டினர்; கான்கிரீட் போட்ட சுவர்கள் கணக்குவழக்கின்றிக் கட்டப்பெற்றன. 1950 முதல் 1959 வரை 10 ஆண்டுகளுக்கு வேலை நடந்தன. அல்லும்பகலும் ஓய்வு ஒழிவின்றி இத்திட்டம் எண்ணியது எண்ணியவாறு நிறைவேற்றப் பட்டது. தொழிலாளர் எட்டுமணி நேரத்துக்கு ஒரு பிரிவாக மூன்று பிரிவினர் வேலைசெய்த வண்ணமாக இருந்தனர். ஆயிரக்கணக்கான இயந்திரங்கள் பயன்படுத்தப் பட்டன.

1959 சூன் 26-இல் இத்திட்டம் நிறைவேறியது. இந்தக் கால்வாய்க்கு **செண்ட் லாரென்சு சீவே** என்று பெயர்.

இதன் விளைவாக மின்சார உற்பத்தி பல மடங்கு ஆகியிருக்கிறது. புதிய துறைமுகங்கள் உண்டாகி யுள்ளன. கனடாவின் கடற்கரை ஓர் ஆயிரம் மைல் கூடிவிட்டது, தொழில்கள் பெருகியுள்ளன. பல நகரங்

களுக்கிடையேயுள்ள தொலைவு குறைந்துவிட்டது. மூலப் பொருள்களை அமெரிக்காவுக்கு அனுப்ப வாய்ப்பு ஏற்பட்டிருக்கிறது. வாகனங்கள் தொகை கூடுதலாகியிருக்கிறது. சிறிது வெப்பமாக இருந்த இடங்களில் கடல்காற்று வீசுகிறது. மாண்ட்ரீலில் 16 மைல் (26 கிலோமீட்டர்) நீளமுள்ள துறைமுகம் அமைந்து உலகிற் பெரிய கப்பல்கள் அந்த நகருக்கு வருகின்றன. சேலத்தில் ஒரு துறைமுகம் ஏற்பட்டால் எப்படி இருக்கும்? அது போன்ற ஒரு கனவு 500 கோடி ரூபாய்ச் செலவில் கனடாவில் நனவு ஆகியிருக்கிறது.

நமது தலைமுறையில் மனிதனின் பெரிய செயல் சந்திரமண்டலத்திற்குச் செல்லும் முயற்சிக்கு அடுத்த படியாக இதுவே.